# முருகன் திருவருள்

**
**

ஆசிரியர் :

என் கே வேலன், பி ஏ,

**
**

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.

1977

நமசிவாய பிள்ளை குழந்தை வேலன் (1907)



கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சி-2



கழக வெளியீடு : ககஅ௨

முதற் பதிப்பு: செப்டம்பர் 1977



MURUGAN THIRUVARUL

# பதிப்புரை

'முருகன் திருவருள்' என்னும் இந் நூலில் முருகப் பெருமானுடைய பெருமைகளும், அவரைப் புகழ்ந்து கூறும் நூல்களிற் காணப்படும் அரிய கருத்துகளும் கந்தபுராணம், தணிகைப் புராணம் முதலிய நூல்களுட் கூறப்படும் செய்திகளின் சுருக்கமும், முருகனைப் பற்றிய தத்துவங்களும், அவரை வழிபட்டு அருள் பெற்ற அடியார்களின் சிறப்பு இயல்புகளும் கூறப்பட்டுள்ளன.

ஓங்காரத்தின் உண்மைப் பொருளும், வேலும் மயிலும் பற்றிய உண்மைகளும், ஆறுபடை வீடுகளில் பெருமான் வீற்றிருக்கும் சிறப்புத் தன்மைகளும், முருகன் திருவிழாக்களின் காட்சிகளும், தெய்வயானை, வள்ளியம்மை திருமணம் பற்றிய கருத்துகளும் கூறப்பட்டுள்ளன.

முத்தமிழால் அங்கு வைதாரையும் வாழவைப்போனாகிய முருகனுக்குத் தமிழ் நூல் ஆசிரியர்கள் செய்த பாமாலைத் திருத்தொண்டுகள் பலப்பல. அவனருள் பெறவிழையும் அடியார்களுக்கு எடுத்துக்காட்டாக உள்ள பல நிகழ்ச்சிகளும், மன முருக்கும் திருப்பாடற் பகுதிகளும் மேற்கோள்களாக இந் நூலிற் கூறப்பட்டுள்ளன.

மக்கள் வாணாளை வீணாளாக்காது நல்வழிப்படுத்துவதற்கு உறுதுணையாக நின்று வழிகாட்டுவது இந் நூல் எனின் மிகையாகாது. நினைப்பவர் மனங்கோயிலாக் கொள்ளும் முருகப் பெருமானை, நினைந்தும், வாழ்த்தியும், வணங்கியும் அவனருள் பெற விரும்பும் அன்பர்கள் தவறாது வாங்கிப்படித்துப் பயன் பெறுமாறு இந்நூல் இயற்றப் பெற்றுள்ளது. இத்தகைய சிறந்த நூலை இனிய எளிய தமிழ் நடையில் எழுதியுதவிய அறிஞர் என். கே. வேலன் பி. ஏ. அவர்களுக்குக் கழகத்தின் நன்றி யுரியதாகும்.

நூல் நிலையத்தாரும் பள்ளித் தலைமையாசிரியர்களும் தமிழாசிரியர்களும் இந் நூலினை வாங்கி மாணவர்களுக்குப் பயன்படுமாறு செய்ய விரும்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்**

# முகவுரை

முருகப் பெருமானிடம் தாம் பெற்ற அனுபவங்களை எவராலும் விளக்கிக் கூற முடியாது. முருகன் அருள்பெற்ற அருணகிரியாரே,

"தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் ஒருவர்க்கு இசைவிப் பதுவோ"

எனவும்,

"செவ்வா னுருவில் திகழ்வே லவன்அன்று
ஒவ்வா ததென உணர்வித் ததுதான்
அவ்வாறு அறிவார் அறிகின் றதலால்
எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப் பதுவே"

எனவும் கூறுகின்றார். என் போன்றவர்களால் அதனை எவ்வாறு விளக்கிக் கூற முடியும்!

யான் வழிபடும் முருகனைப் பற்றி ஒரு நூல் எழுத வேண்டுமென நீண்டகாலமாக எண்ணிக் கொண்டிருந்தேன். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் திரு. சுப்பையா பிள்ளை அவர்களிடம் கேட்டேன். "முருகன் திருவருள்" என்ற தலைப்பில் எழுதலாம் என்றார்கள். அவர்கள் கூறியபடியே எழுதி முடித்தேன். இறைவன் திருவருளால் எனது எண்ணம் நிறைவேறியது. அடியார்கள் அன்புடன் 'முருகா' என்றால் விரைந்து ஓடிவந்து அருள் புரிகின்றான் முருகன்.

"அஞ்சு முகம்தோன்றில் ஆறு முகம்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்
முருகாஎன்று ஓதுவார் முன்"

என்பது ஆன்றோர் வாக்கு.

என்னுடைய தாய் தந்தையர் முருகப்பெருமானிடம் இடையரூத பேரன்பு செலுத்தி வந்தனர். முருகன் திருவுருவத்தையும் வேலாயுதத்தையும் வைத்து வணங்கி வந்தனர். என்னைப் பெற்ற அன்னையார், தம் குழந்தைகளுக்கும் பேரப்பிள்ளைகளுக்கும் ''வேல்'', ''வேல்'' என்று பெயர் வைத்து அழைப்பார்கள். குழந்தைகளுக்கு உடல்நலம் குன்றினாலும் காய்ச்சல் வந்தாலும் காணிக்கையை மஞ்சள் துணியில் கட்டிவைத்துப் பழநி ஆண்டவருக்குச் செலுத்துவார்கள். முருகன் திருவருளால் நோய் நீங்கும். அம்மையார் திருநீறு பூசினால் நஞ்சும் நீங்கிவிடும்.

பெரியவர்கள் முருகப் பெருமானிடம் வைத்திருந்த அன்பு என்னையும் பற்றிக்கொண்டது. நேரம் கிடைக்கும் போதெல்லாம் ஆறுபடை வீடுகளுக்குச் சென்று முருகன் அழகைக் கண்டு களிப்பேன். ஒவ்வொரு புத்தாண்டும் சனவரி முதல் நாள் திருத்தணிக்குச் சென்று முருகனை வணங்குவேன். திருப்புகழ் பாடல்களைக் கேட்டு அடியார் கூட்டத்தையும் கண்டு மகிழ்வேன்.

பழநி ஆண்டவரைக் கண்டால் என் கண்களில் இன்பக் கண்ணீர் பெருகும். திருமுழுக்கு வழிபாடுகளைப் பார்த்துக் கொண்டே இருப்பேன். ஆண்டவரை விட்டுப்பிரிய மனம் வராது.

திருச்செந்தூருக்கு அருகில் வேலைபார்த்துக்கொண்டிருந்த போது அடிக்கடி திருச்செந்தூர் முருகனைக் காணச் செல்வேன். திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களின் சொற்பொழிவுகளைப் பன்முறை கேட்டிருக்கிறேன். கந்தர் அநுபூதியில்,

''ஆடும்பரிவேல் அணிசேவலெனப் பாடும்பணியே'

என்று தொடங்கும் பாடலையும்,

''குருவாய் வருவாய் அருள்வாய் குகனே''

என்று முடியும் பாடலையும் இரவில் ஓதிவிட்டுப் படுத்து உறங்கினால் என்றைக்காவது ஒருநாள் முருகன் கனவில் தோன்றுவான் என்று வாரியார் அவர்கள் சொன்னார்கள். இஃது உண்மையாகவே நடந்து விட்டது.

முருகன் குழந்தைவடிவில் வருகின்றான். குமரக் கடவுளாகக் காட்சியளிக்கின்றான். ஆண்டிப் பண்டாரமாகவும் வருகின்றான். வானளாவ உயர்ந்து நிற்கின்றான். எம் பெருமானுடைய சிரிப்பின் அழகு நம்மைக் கவர்ந்து இழுக்கின்றது.

பல ஆண்டுகளுக்கு முன்பு ஒருநாள் நான் வேலைபார்க்கும் அலுவலகத்திற்கு ஒரு பெரியவர் வந்தார். வெள்ளியால் செய்த வேல் ஒன்று கொண்டுவந்தார்.

"இதை வைத்து வழிபாடு செய்யுங்கள் எல்லா நன்மைகளும் உண்டாகும்", என்றார்.

"என்ன விலை?" என்று கேட்டேன்.

"இதற்கு விலை கிடையாது" என்று சொல்லிக் கொண்டே போய்விட்டார்.

மாடியிலிருந்து இறங்கிவந்து தேடிப்பார்த்தேன். அவரைக் காணவில்லை. அந்த வேலாயுதத்தை வைத்து வணங்கி வருகின்றேன். அஃது என்கைக்கு வந்தது முதல் பல நன்மைகள் ஏற்பட்டன. வேலாயுதத்தை எனக்குக் கொடுத்தவர் யாரென்று தெரியவில்லை. அதற்குப் பிறகு அவரைக் காணும் வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை.

துன்பம் வரும்போது 'முருகா' என்றால் உடனே உதவிக்கு ஆள் வருகின்றது. துன்பம் விலகிப் போகின்றது. முருகன் திருவருள் கிடைத்து விட்டால் ஆகாதது ஒன்றுமில்லை. இந்நூலை எழுத வைத்தவன் முருகன். இதனை வெளியிடும் கழகத்தினர்க்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என். கே. வேலன்

# உள்ளுறை

# முருகன் திருவருள்

## 1. அழகுத் தெய்வம்

முருகப் பெருமான் திருவருளால் இந்நூலை எழுதத் தொடங்குகின்றேன். நெஞ்சில் ஒருமுறை நினைத்தால் முருகன் விரைந்து வந்து அருள் புரிகின்றான்.

''அஞ்சு முகந்தோன்றில் ஆறு முகம்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்
முருகாஎன்(று) ஓதுவார் முன்''

அழகுத்தெய்வம் முருகன். மலையும் மலை சார்ந்த இடங்களிலும் இயற்கை அழகுடன் சேர்த்து முருகனை வழிபடுகின்றோம். 'குறிஞ்சிக்கிழவன்' என்று மலைமீது வைத்து வணங்குகின்றோம்.

'மலைக்கு நாயக' என அருணகிரிநாதர் கூறுகின்றார். தெய்வத்தன்மை, இனிமை, இளமை, மணம், மகிழ்ச்சி, அழகு என்ற ஆறுதன்மைகளையுடையவன் முருகன்.

''முருகு கள் இளமை நாற்றம்
முருகவேள் விழா வனப்பாம்''

நக்கீரர் முருகனது அழகின் இயல்பினைக்

''கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு''

எனக் கூறுகின்றார். இயற்கை அழகில் அவர் தெய்வத்தைக் காணுகின்றார். பண்டைக்காலத் தமிழ்மக்கள் இயற்கைவழி வாழ்வு நடத்தி அதற்கு அடிப்படையாக

உள்ள அழகுதன்மையை உணர்ந்து முழுமுதற்கடவுளுக்கு 'அழகு' என்னும் பொருள்பட முருகன் என்ற பெயரை வைத்துள்ளனர். அழகும் இளமையும் விரும்புகின்றவர்கள் முருகனை எப்பொழுதும் நினைந்த வண்ணமாக இருத்தல் வேண்டும்.

முருகன் எப்பொழுதும் இளமையோடிருப்பவன், இனிமையுடையவன், இன்பமுடையவன், பேரழகுடையவன், அறிவே வடிவாய்த் திகழ்பவன், பிறப்பும் இறப்பும் இல்லாதவன்.

"பெம்மான் முருகன் பிறவான் இறவான்"

என அருணகிரிநாதர் கூறுகின்றார். சிவபெருமானுடைய தொன்மை வடிவமே ஆறுமுகவடிவ மாகும்.

"அந்திக்கு நிகர்மெய் யண்ணல்
அருள்புரிந்து அறிஞர் ஆயோர்
சிந்திக்கும் தனது தொல்லைத்
திருமுகம் ஆறும் கொண்டான்"

என்பது கந்தபுராணம். ஆறு திசைகளிலும் முகங்களை யுடையவன் ஆறுமுகன். எல்லாத்திசைகளிலும் பார்வை யுடையவன் என்பது அதன் பொருள்.

அமெரிக்க நாட்டு நண்பர் ஒருவர் முருகன் படத்தைக் கண்டு மயங்கிவிட்டார். "இதைப் போன்ற அழகிய உருவத்தை நான் எங்கும் கண்டதில்லை" என்றார். ஐரோப்பிய நாட்டில் ஓர் அன்பர் மாடியிலிருந்து கால் தவறிக் கீழே விழுந்தார். முருகப்பெருமான் அவருக்குக் காட்சியளித்துத் தாங்கிக் கொண்டார். முருகன் அழகில் மயங்கி முருகனைக் காண இந்திய நாட்டிற்கு வந்தார். அவர் மதுரைக்குச் சென்றபோது முருகப் பெருமான் மயில்மீது அமர்ந்து ஊர்வலம் வந்துகொண்டிருந்தார். 'என்னை ஆண்டுகொண்ட தெய்வம் இதுவே' என்று கீழே விழுந்து வணங்கினார். "என்னைக் காப்பாற்றிய

போதும் இதே கோலத்தில் வந்தார்'' என்று வழிபாடுகள் செய்யத் தொடங்கினர். இவ் அன்பர் மதுரைக்கு அருகில் தவம் செய்து சமாதி அடைந்தார் எனக் கூறப்படுகின்றது.

அருணகிரியார் கந்தரநுபூதியில் சிறப்பாக மூன்று திருப்பெயர்களைக் கூறுகின்றார்.

''முருகன் குமரன் குகன் என்றுமொழிந்(து)
உருகும் செயல்தந் துணர்வென் றருள்வாய்''

எனப் பாடுகின்றார்.

குமரன் என்னும் பெயர் நடுநாயகமாக விளங்குகின்றது. இளமைப் பருவத்தை யுடையவன் முருகன், அழகாக இருப்பவன், அருட்செல்வத்தை வழங்குபவன் எனப் பொருள் கொள்ளலாம்.

''குமரா நமஎன்று கூறினர் ஓர்கால்
அமரா வதியாள் வார்''

எனச் சிதம்பர அடிகள் கூறுகின்றார்.

''நாதா குமரா நமஎன்(று) அரனர்
ஓதாய் எனவோ தியதெப் பொருள்தான்''

என அருணகிரியார் பாடுகின்றார்.

முருகன் அழகினை வியந்து பாராட்டுகின்றார் கச்சியப்பர் :

''ஆயிரம் கோடி காமர் அழகெலாந் திரண்டொன் றாகி
மேயின எனினும் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் எழிலுக் காற்ற தென்றிடின் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்''

(கந்தபுராணம்)

''அறமும் நிறமும் அயிலும் மயிலும்
அழகு முடைய பெருமாளே'' (திருப்புகழ்)

முருகன் ஆன்மாக்களின் அறியாமையை நீக்கு குருபரனாகவும் வருவான்.

''முருகன் தனிவேல் முனிநம் குருஎன்று
அருள்கொண் டறியார் அறியுந் தரமோ''

எனவும்,

''குருவாய் வருவாய் அருள்வாய் குகனே''

எனவும் முருகன் அருள்பெற்ற அருணகிரியார் பேசு கின்றார்.

முருகனுக்குக் காங்கேயன், கார்த்திகேயன், கந்தன் கடம்பன், சரவணபவன், செவ்வேள், சேவற்கொடியோன் தேவசேனாபதி, வேலன், சுப்பிரமணியன் என்ற பெயர் களும் வழங்கி வருகின்றன.

கங்கைக்கு மைந்தனாக வந்ததால் 'காங்கேயன்' என் றும், கார்த்திகைப் பெண்கள் வளர்த்ததனால் 'கார்த்தி கேயன்' என்றும், பகைவருடைய வலிமையை வற்றச் செய்பவன் 'கந்தன்' என்றும், கடப்பமலர் மாலையை அணி வதால் 'கடம்பன்' என்றும், சரவணப் பொய்கையில் தோன்றியதால் 'சரவணபவன்' என்றும், செந்நிறம் படைத்தவன் 'செவ்வேள்' என்றும், தேவர்களின் சேனைத் தலைவனாக இருந்து சூரனை வென்றதால் 'தேவசேனாபதி' என்றும், அறிவுச் சுடராகிய வேலை ஏந்தியவன் 'வேலன்' என்றும், முதற் பொருளாக விளங்குவதால் 'சுப்ரமணியம்' என்றும் பெயர் பெறுகின்றான்.

சிவம் வேறு முருகன் வேறு அன்று. சிவபெருமானே முருகன் என்ற வடிவத்தில் தோன்றுகின்றார்.

''ஆதலின் நமது சத்தி அறுமுகன் அவனும் யாமும்
பேதகம் அன்றால் நம்போல் பிரிவிலன் யாண்டும் நின்றான்
ஏதமில் குழவி போல்வான் யாவையும் உணர்ந்தான் சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்''

என்று சிவபெருமான் உமாதேவியாரிடம் உரைத்தருள்கின்றார். ஆகலின் சிவமும் முருகனும் ஒரே பரம்பொருளென உணர்தல் வேண்டும். வள்ளிநாயகியை (இச்சா சக்தி) 'விழைவாற்றல்' எனவும், தேவசேனையைக் (கிரியா சக்தி) 'செயலாற்றல்' எனவும், முருகன் கைவேலினை (ஞான சக்தி) 'அறிவாற்றல்' எனவும் கூறுவர். இகம் பரம் வீடு என்ற மூன்று நலன்களையும் வழங்குபவன் முருகன்.

முருகப் பெருமான் தமிழ்க் கடவுளாக வீற்றிருக்கின்றான். தமிழ்மொழியிலுள்ள 'பன்னிரண்டு உயிரெழுத்துக்கள்' அப் பெருமானுடைய பன்னிரு தோள்களெனவும், 'பதினெட்டு மெய்யெழுத்துக்கள்' முருகனுடைய பதினெட்டுக்கண்கள் எனவும், 'இன எழுத்துக்கள் ஆறும்' ஆறு திருமுகங்கள் எனவும், ஃ என்ற ஆயுத எழுத்து அறிவுச் சுடராகிய வேல் எனவும் கூறப்படுகின்றது.

''கண்ணிகர் மெய்யும் சென்னிக்
கணமுறழ் இனத்தின் கூறும்
திண்ணிய தோள்களேபோல்
திகழ்தரும் உயிரும் வேறொன்(று)
எண்ணுதற் கரிய தாகும்
எஃகமும் இயலிற் காட்டும்
புண்ணிய முனிக்கோன் செவ்வேள்
பொற்பதத் தடிமை தானே''

என்னும் பாடலினால் இவ் உண்மை விளங்கும். முருகன் தன்னை வணங்கும் அடியார்களுக்குக் காவல்காரனாக வந்து அருள்புரிகின்றான்.

''தொழுதுவழி படும்அடியர் காவற் காரப் பெருமாளே''

எனப் பழநித் திருப்புகழ் ஓதுகின்றது.

மாறாத இளமையோடிருக்கும் முருகப் பெருமான் தன்னை விரும்பி வழிபடும் அடியார்களின் துன்பத்தை நீக்கி இன்பத்தை அருள்கின்றான்.

ஓம் என்ற பிரணவத்தில்,

அ – படைக்கின்றது
உ —காக்கின்றது
ம—ஒடுக்குகின்றது

இம் மூன்றில் காக்கின்ற எழுத்தாகிய உகரமே சிறந்தது பெரிய புராணத்தில்,

''உலகெலாம் உணர்ந்(து) ஓதற் கரியவன்''

எனச் சேக்கிழார் தொடங்குகின்றார்.

கம்பராமாயணத்தில்,

''உலகம் யாவையும் தாமுள வாக்கலும்''

எனக் கம்பர் பாடுகின்றார்.

திருமுருகாற்றுப்படையில்,

''உலக முவப்ப வலனேர்பு திரிதரு''

என நக்கீரர் தொடங்குகின்றார். உகரத்தின் பெருமை இதனால் விளங்கும்.

'முருகு' என்ற சொல்லில்,

ம்+உ
ர்+உ
க்+உ

என மூன்று உகரங்கள் வருகின்றன. காக்கும் எழுத்தாகிய உகரம் இச் சொல்லில் சிறப்பாக அமைந்துள்ளது. நம்மைக் காக்கும் கடவுள் முருகன். மன இருள், அறியாமை, துன்பம் இவற்றிலிருந்து நம்மைக் காப்பாற்றுகின்றான். வினைகளைப் போக்கும் வேலுடனும், அச்சத்தை அகற்றும் மயிலுடனும் விளங்குகின்றான்.

# 2. புராணக் கதையின் தத்துவம்

**கந்தபுராணம் :**

சூரபதுமன் கடுந்தவம் புரிந்து பல வரங்களைப் பெற்று வானவர்களைக் கொடுமைப்படுத்தினன். 'சூரனை அடக்குவதற்கு ஒரு குமரனைத் தந்தருளும்' என்று தேவர்கள் சிவபெருமானிடம் வேண்டிக்கொண்டனர். இறைவன்நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகள் தோன்றின. இறைவன் ஆணைப்படி தீப்பொறிகளை எடுத்துச் சென்ற காற்றுக் கடவுளும் நெருப்புக்கடவுளும் அனலின் வெப்பத்தைத் தாங்கமுடியாமல் அந்த நெருப்புப்பொறிகளைக் கங்கையில் விடுத்தனர். கங்கை சரவணப் பொய்கையில் கொண்டு போய்ச் சேர்த்தது. அருட்சுடர்கள் ஒன்றுபட்டு ஆறு திருமுகங்கள் பன்னிரு தோள்களுடன் முருகப்பெருமான் தோன்றினர்.

"அருவமும் உருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்ருய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம் உய்ய"

கார்த்திகைப் பெண்கள் அறுவரும் குழந்தையை எடுக்க ஆசையுடன் வந்தனர். முருகப் பெருமான் ஆறு குழந்தைகளாக மாறிக் கார்த்திகைப் பெண்களிடம் வளர்ந்தார். குழந்தைகளின் விளையாட்டினைக் கச்சியப்பர் பின்வருமாறு கூறுகின்ருர் :

ஒரு குழந்தை துயிலும்; மற்ருென்று பேசும். இன்ஞென்று பாலுண்ணும்; ஒன்று நகைக்கும்; ஒன்று அழும்; ஒன்று தண்ணீரைக் கலக்கும்; ஒன்று ஆட, ஒன்று பாட, ஒன்று கைகொட்டிக் கூத்தாடும். உருவமும், முதலும், முடிவும் இல்லாத கடவுள் குழந்தைவடிவாகிச் சரவணப் பொய்கையில் விளையாடிக் கொண்டிருந்தார்.

சிவபெருமான் உமையம்மையுடன் சரவண பொய்கையினை அடைந்தார். உமாதேவியார் குழந்தை களை எடுத்து அணைத்தவுடன் ஆறு திருமேனிகளு ஒன்றுபட்டன; முருகன் ஆறுமுகம் பன்னிரு தோள் களுடன் காட்சியளித்தார். பின்னர்த் திருக்கயிலா மலைக்குச் சென்று சத்தாகிய சிவத்துக்கும் சித்தாகிய உமா தேவிக்கும் இடையில் ஆனந்தமாகிய 'முருகவேள்' வீற்றி ருந்தார்.

முருகப் பெருமான் மலைகளைப் பந்தாடியும் கடல் களைக் கலக்கியும் அற்புதமான திருவிளையாடல்களைப் புரிந்தார். தேவர்கள் நிலைகலங்கினர். பிறகு முருகன் பேராற்றலை யுணர்ந்து சிவபெருமானிடம் சென்று சூரனை அடக்கியருளும்படி வேண்டிக்கொண்டனர். எம்பெரு மான் முருகனிடம் வேலாயுதத்தைக் கொடுத்து 'அசுரர் களை அழித்துத் தேவர்களின் குறையைத் தீர்த்து வருக' என்று அனுப்பினர். உமாதேவியாரும் முருகனையும் வேலினையும் வாழ்த்தி அனுப்பினர்.

குமாரக்கடவுள் வீரவாகு தேவரைச் சூரனிடம் தூதனுப்பினர். சூரன் தேவர்களைச் சிறையில் அடைத்து வைத்திருந்தான். அவர்களைச் சிறைநீக்க மறுத்ததால் முருகன் சூரனுடன் போர்புரிந்து அசுரர்களை யெல்லாம் அழித்தார். சூரன் பல மாய வடிவுகள்கொண்டு போரிட் டான். முருகன் 'விசுவரூபம்' என்ற பெரிய வடிவத்தை அவனுக்குக் காட்டியருளினர்.

"கோலமா மஞ்ஞை தன்னில்
குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாள்
பரிசிவை உணர்ந்தி லேன்யான்
மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற
மூர்த்தியிம் மூர்த்தி யன்றோ"

என்று சூரன் முருகனைப் போற்றினான். பின்பு இறைவன் அவனுடைய அறிவை மாற்றி முன்போல் குழந்தை வடிவத்துடன் தோன்றினார்.

சூரன் சினமடைந்து மீண்டும் போருக்கு வந்தான். முருகவேள் வேலாயுதத்தை ஏவினார். சூரன் கடலின் நடுவில் ஒளிந்து கொண்டான். வேல் அவனைத் துரத்திச் சென்றது. சூரன் மிகப் பெரிய மாமரம் ஆகி நின்றான். வேல் மாமரத்தைப் பிளந்ததும் சூரன் அசுரவடிவுடன் எதிர்த்து வந்தான். வேலாயுதம் அவனுடைய உடலைப் பிளந்தது. அந்த இரு கூறுகளும் மயிலும் சேவலும் ஆகி முருகனிடம் வந்தன. முருகப்பெருமான் மயிலை வாகனமாகவும் சேவலைக் கொடியாகவும் கொண்டருளினார். முருகப்பெருமான் தேவர்களைச் சிறைமீட்டு இந்திரன் புதல்வி தெய்வயானையைத் திருமணம் செய்துகொண்டார். பின்னர் முருகனை அடையவேண்டுமென்று தவங்கிடந்த வள்ளியையும் மணம்புரிந்து திருத்தணிகையில் தங்கினார். வள்ளியுடன் கந்தகிரியை அடைந்து உயிர்கட்கெல்லாம் அருள்மாரி வழங்கி வந்தார்.

**இயற்கைத் தெய்வம் :**

'முருகு' என்பது பல பொருள் குறிக்கும் ஒரு சொல். அவற்றுள் சிறப்பாகக் குறிக்கத் தக்கவை நான்கு. அழகு, இளமை, மணம், கடவுள்தன்மை என்பன இந் நான்கு பொருள்கள் அடங்கிய சொல்லால் பண்டைத் தமிழர்கள் முழுமுதற் பொருளை அழைத்து வந்தனர்.

நக்கீரர் தாமுணர்ந்த இயற்கை அழகினைத் திருமுருகாற்றுப்படையாகப் பாடி மகிழ்ந்தார்.

"கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு"

எனப் பாடுகின்றார். பண்டைத் தமிழ் மக்கள் இயற்கை வழி வாழ்வு நடத்தி அதற்கு அடிப்படையாக உள்ள அழகினைக் கண்டு இயற்கை அழகைப் போற்றி வந்தனர்.

முழுமுதற் பொருளுக்கு அழகு என்னும் பொருள்
முருகன் என்னும் பெயரணிந்தனர்.

இளமை முருகன் கூறுகளில் ஒன்றாக இருக்கின்றது
முருகப் பெருமானை எப்பொழுதும் நினைப்பவர்கள் என்று
இளமையோடிருக்கலாம்.

'முருகன்' என்ற சொல் மிகவும் தொன்மையான
முருகன் 'தமிழ்க் கடவுள்' என்பதாலும், 'குறிஞ்சிநில
கடவுள்' என்பதாலும் முருகின் தொன்மை நன்கு விள
கும். மக்கள் முதன் முதலாகத் தோன்றிய இடம் தமி
நாடு என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். முதன் மு
லாகக் கடவுளுக்கு வைத்த பெயர் 'முருகு' என்ப
லிருந்து அதன் தொன்மையை அறிந்து கொள்ளலாம்.

மக்கள் வாழ்வு முதன்முதலாகத் தொடங்கிய இட
மலை என்பது அறிஞர் கொள்கை. மலையில் வாழ்ந்
பழைய மக்கள் தங்கள் கடவுளைக் 'குறிஞ்சி கிழான்' என்று
'மலைகிழவோன்' என்றும் போற்றிவந்தனர். தமி
மக்களின் வாழ்வு தொடங்கியதிலிருந்து முருகன் தமி
நாட்டுத் தெய்வமாகக் காட்சியளிக்கின்றான். வடநாட்ட
னருக்கு 'முருகன்' என்றால் தெரிவதில்லை. கார்த்தி
கேயன், சுப்பிரமண்யன் என்றால் புரிந்து கொள்கி
றனர்.

தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரே தமிழ்நாட்டி
முருகன் வழிபாடு நடைபெற்றுவந்தது. பழகிப் பழ
முதிர்ந்து வளம்பெற்ற நிலையில் அவ் வழிபாடு செய்ய
பட்டது. முருகப் பெருமான் குணம் குறிகளைக் கடந்தவ
இயற்கையே முருகனுக்கு உடலாக அமைந்திருக்கின்றது
இயற்கையின் அழகைக் காணும்போது முருகன் உணர்
பெருக்கெடுக்கும். அழகுடையதெனக் கருதப்படு
ஒன்றை ஒருமையுடன் வழிபடும் ஒருவன் நாளடைவி
அந்த அழகினை எங்கும் காண்கின்றான். அவனுக்
இயற்கையுலகமே முருகன் ஆக விளங்குகின்றது.

நம் முன்னோர்கள் முருகப் பெருமானுக்கு மலையிலும் மலைசார்ந்த இடங்களிலும் திருக்கோவில் கட்டினர். எனவே குன்று தோறாடும் முருகன்' எனப்போற்றினர். ஒவ்வொரு குன்றும் முருகன் கோயில் என அறிவுறுத்தினர்.

ஞாயிற்றின் ஒளியினால் அன்பர்களின் உள்ளொளி பெருகுகின்றது. முருகன் அடியாராகிய, நக்கீரனார்

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு"

எனத் திருமுருகாற்றுப்படையைத் தொடங்குகின்றார். ஞாயிறு முருகனுக்கும் நீலக்கடல் மயிலுக்கும் உவமையாக இருக்கின்றன. எம்பெருமான் ஞாயிற்றின் வாயிலாக உலகிற்கு அருள் புரிகின்றான். காலையில் முருகன் சிவந்த ஞாயிறு போல் நீலக்கடல் என்னும் நீலமயிலின்மேல் காட்சியளிக்கின்றான்.

கந்தபுராணத்தில் சூரபன்மன் ஆணவத்தினால் பல வடிவம் தாங்கி முருகனுடன் போர்புரிகின்றான். முடிவில் எல்லாமிழந்து தன்னந்தனியனாய் நிற்கின்றான். அவனுடைய ஆணவம் அடங்கிய போது எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் முழுமுதற் கடவுளைக் காணுகின்றான். மீண்டும் முனைப்பு ஏற்பட்டுப் பகைமையுளம் கொண்டு போர்புரிகின்றான்.

புராணக்கதையில் வரும் போர் ஒவ்வோர் உள்ளத்திலும் நடக்கும் போராட்டத்தைக் காட்டுகின்றது. நமது உள்ளம் ஒரு போர்க்களமாக இருக்கின்றது. இக் களத்தில் நாள்தோறும் போர் நடக்கின்றது. ஒவ்வோர் உயிரிடத்தும் முனைப்பு உண்டு. முனைப்பைக் களைய வேண்டுவது உயிரின் கடமையாகும். உயிருக்குயிராயுள்ள அருட்கடவுள் முருகன் ஆணவத்தை அடக்குவதற்குத் துணை புரிகின்றார். திருவருள் பதியப்பதிய ஞானசக்தி என்னும் அறிவாற்றல் எழுகின்றது. அஃது எழுந்து

பாயும்போது முனைப்பு அழிந்து விடும். அறிவி கூர்மையை முருகன் கைவேல் எனக் கூறுகின்றோம்.

முனைப்பு கடவுளைப் பற்றிய உணர்வையும் எ ணத்தையும் மறைக்கும். அதுவே இறப்பைத் தந் பிறப்புக்கு வித்தாக நிற்கின்றது. ஆதலால் முனை என்னும் அரக்கனை ஒழித்து முருகனைப் பெற முய செய்ய வேண்டும்.

"எனது யானும் வேருகி எவரும் யாதும் யானுகும்
இதய பாவ ஞதீதம்—அருள்வாயே"

எனவும்,

"இருவினையும் மலமுமற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுகம் அதனையருள்"

எனவும் அருணகிரிநாதர் பாடுகின்றார்.

"கிரிவாய் விடுவிக் ரமவேல் இறையோன்
பரிவா ரமெனும் பதம்மே வலையே
புரிவாய் மனனே பொறையாம் அறிவால்
அரிவாய் அடியோ டுமகந் தையையே"

எனக் கந்தரநுபூதியில் கூறுகின்றார்.

யான், எனது என்னும் செருக்கை அறுத்தா முருகன் திருவருள் என்ற காந்தம் பிடித்து இழுக்கு அச் சீரிய எண்ணமுடையாரிடம் முருகன் அரு விரைந்து வரும். உண்மை அன்புடன் "முருகா, ஆ கொள்க" என ஒருமுறை வேண்டினாலும் முருகன் அரு பெறலாம். அன்பர்களுக்கு முருகன் எளியனாக வருகி றான். அழகும் இளமையுமுடைய முருகனைப் போற் நினைந்து வந்தால் அவன் அருளை எளிதிற் பெறலாம்.

"முருகா எனவோர் தரமோ தடியார்
முடிமேல் இணைதாள்—அருள்வோனே"

"ஒருக்கால் நினைந்திட் டிருக்கால்
மிகுத்திட் டுரைப்பார்கள் சித்தத்
துறை வோனே"

என அருணகிரியார் ஓதுகின்றார். அவருடைய திருப்புகழை ஓதும்போதும், பிறர் ஓதக் கேட்கும்போதும் முருகக் கடவுளின் நுண்ணிய வடிவம் அகத்தில் புலனாகின்றது. திருப்புகழைப் பாடும்போது அன்பும் உணர்ச்சியும் மேலிடுவதைக் காணலாம்.

இயற்கைப் பொருள்களின் உள்ளே மறைந்து நிற்கும் பொருள் ஒன்று இருத்தல் வேண்டும் என்று பண்டைய தமிழ் மக்கள் உணர்ந்தனர். நாள்தோறும் உதித்து மறையும் கதிரவனைக் கண்டு இதுதான் நம்மை ஆட்டிவைக்கும் பொருள் என்று எண்ணினர். ஞாயிற்றின் ஒளியும் வெப்பமும் உலகிற்குப் பெரிதும் பயன்படுவதால் அதனுள்ளே கடவுள் தன்மை மறைந்திருக்கிறது என்று துணிந்தனர். இயற்கைப் பொருள்களில் காணப்படும் தன்மைகள் எல்லாம் கடவுள் தன்மையின் விளக்கங்களே என மணிவாசகர் அருளிச் செய்துள்ளார்:

"அருக்கனிற் சோதி யமைத்தோன் திருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன் திண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலி னூக்கங் கண்டோ னிழறிகழ்
நீரி லின்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணிற் றிண்மை வைத்தோன்"

எனவும்,

"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி"

எனவும் பாடுகின்றார்.

ஞாயிற்றின் ஒளிக்கதிர்:

ஞாயிறு எழும்போது தமிழ்மக்கள் அதில் தோன்றி இறைவனது ஒளிவிளக்கத்தைச் செவ்வொளியாகக் கண்டனர். காலையில் எழும் ஞாயிறு சிவந்த ஒளியுடன் காணப்படும். செவ்வொளி விளக்கமே இறைவன உண்மை உருவென்றும் அதனால் நடைபெறும் செய கள இறைவன் அருட்செயல்களென்றும் நம்பி வந்தன ஞாயிற்றின் சிவந்த ஒளியினையே இறைவனாகக் கண் வணங்கத் தொடங்கினர். இறைவனைச் 'சேயோன்' எ னும் பெயர் கொண்டு அழைத்து வழிபாடுகள் செய்தன நாளடைவில் சேயோன் என்னும் தமிழ்ப் பெயர் சிவ என்று மாறிவிட்டது. 'சிவன்' என்ற சொல்லிற் சேயோன் என்பதே உண்மைப் பொருளாகும்.

ஞாயிற்றின் தோற்றங் கண்டு அதன் செந்நி தன்மை யுணர்ந்து அந்நிறப் பெயரால் தமிழ்மக் தங்கள் கடவுளுக்குப் பெயரிட்டழைத்தனர். முருகவேளை 'செவ்வேள்' என்பதும் "ஞாயிறு கடற்கண்டாங்கு" எ பதும் இதனால் தெளியப்படும். ஐயாயிரம் ஆண்டுகளுக் முன்னிருந்த தொல்காப்பியரும்,

"சேயோன் மேய மைவரை உலகமும்"

எனக் கூறுகின்றார்.

ஞாயிறு மறைந்த மாலைப்பொழுதில் இருளில் எ செய்வோமென்று ஏங்கியிருந்த மக்கள் நிலவு தோன் வதைக் கண்டனர். நிலவு இருட்டினை மாய்த்து உத செய்வதைக் கண்டு வியந்து கடவுளுக்கு 'மாயோ என்ற பெயரையும் சூட்டினர். 'மாய்' என்ற சொல் 'மா என ஆகிவிட்டது. கடவுளுக்கு இட்ட பெயர்கள் பி காலத்தில் சிவபிரான் திருமால் எனக் கொள்ளப்பட்ட சேயோன் என்ற முருகன் சிவனுக்கு மகனாகவும் திரு லான மாயோனுக்கு மருமகனாகவும் பரிந்தழைக்கப்பட் தாக வரலாறு கூறுகின்றது.

முருகன் என்பதும் சேயோன் என்பதும் ஒன்று. சேயோன் என்று பெயரிட்டு அழைக்கப்பட்ட முழுமுதற் கடவுளே முருகப்பெருமான் ஆகின்ருன். சிவபெருமானே முருகனுகத் திகழ்கின்ருன்.

விடியற்காலையில் கிழக்கில் எழுந்து பொன்வண்ண மாய்ச் செஞ்சுடர் வீசி ஒளிவிடும் ஞாயிற்றினைக் காணும் போது சில உண்மைகள் புலப்படும். ஞாயிற்றின் ஒளி நான்கு திசைகளிலும் மேலும் கீழும் ஆறு பக்கங்களிலும் ஒளி காட்டுவதால் அதற்கு ஆற்றல் அளிக்கும் பெருமானின் ஆறுமுகங்களின் உண்மை வெளிப்படுகின்றது.

ஞாயிறு எழுந்தவுடன் அதன் ஒளி பட்டுக் கடல்நீர் தனது நீல நிறத்தினைச் செவ்வையாக விளக்கிக் காட்டுவதால் அது மயிலாகக் கருதப்பட்டது. அலையின் அசைவுகளால் நீரில் தோன்றும் ஒளி மயிலின் தோகையிலுள்ள கண்களைப் போல் காணப்பட்டது. ஞாயிற்றின் செங்கதிரை வேலெனக் கொண்டனர். அது 'கதிர்வேல்' எனப் பெயர் பெற்றது. கடலில் எழும் ஞாயிற்றின் காலைக் காட்சி நீல மயில்மேல் ஏறிவரும் முருகப்பெருமானின் அருட்காட்சியாக விளங்குகின்றது.

அருணகிரிநாதர் தமது திருவகுப்பில்,

"உததியிடை கடவுமர கதவருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
யுகமுடிவின் இருளகல ஒருசோதி வீசுவதும்"

என அருளிச் செய்துள்ளார்.

உலகம் முழுவதிலும் கலந்து அதனை இயக்கும் தலைவனுக்கு ஞாலத்தையே திருமேனியாகவும் அதற்கு அடிப்படையாகிய ஐம்பூதங்களும் உயிரு'மாகிய ஆறினையும் ஆறுமுகங்களாகவும் உருவகித்துக் கூறுவது வழக்கம். எங்கும் நிறைந்த கடவுள் தன்மையை மக்களுக்கு நினை

ஊட்டக் கருதிய பெரியோர் இறைவனை ஆறுமுகப் பெ மான் என்றனர். இறைவனுடைய ஆறு திரு முகங்க ஐந்து திருவைந்தெழுத்தாகும். ஆருவது திரு ஓங்காரமாகிய பிரணவத்தைக் குறிக்கும்.

''ஓமெனப்படுங் குடிலேயே ஒப்பிலா முருகன்
மாமு கத்துளொன் ரும்'' (கந்தபுரா

முருகனைக் குணம் குறியற்ற பரம்பொருளாகப் பல வல்களில் போற்றியுள்ளனர் :—

''ஊரி லான்குணம் குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரி லானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு
நேரி லானுயிர்க் கடவுளாய் என்னுளே நின்ருன்''
(கந்தபுரா

''வாசித்துக் காணொணுதது
பூசித்துக் கூடொணுதது
வாய்விட்டுப் பேசொணுதது—நெஞ்சினுலே
மாசர்க்குத் தோணொணுதது
நேசர்க்குப் பேரொணுதது
மாயைக்குச் சூழொணுதது.'' (திருப்பு

முருகனுக்கு அறிவே திருமேனி என்றும் அவ டைய திருவருளினுலேயே அவனை அறியலாம் என்று பெரியோர் கூறியுள்ளனர் :—

''அறிவுமறி யாமையுங் கடந்த
அறிவுதிரு மேனியென் றுணர்ந்துன்
அருணசர ணரவிந்த மென்று அடைவேனே''

''அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சும்
அடியார் இடைஞ்சல்—களைவோனே''

''அறிவை யறிவா லறிந்து—நிறைவாகி
அகில புவனு தியெங்கும் வெளிப்புற
மெய்ஞ்ஞான இன்ப
அமுதை யொழியா தருந்த—அருள்வாயே.''

இறைவனை, என்றும் நிலைத்த பரம்பொருள் என் வர்கள் சத்தென்றும், முற்றறிவினன் என்பவர்கள் சித் தென்றும், பேரின்ப வடிவினன் என்பவர்கள் ஆனந்த னென்றும் கூறுவர். இவற்றிற்கு ஏற்றவாறு முழுமுதற் கடவுளைத் தந்தையென்றும், தாயென்றும், மைந்தனென் றும் வழிபடுதல் மரபு.

மெய்ப்பொருள் (தத்துவ) விளக்கம்

ஆறுமுகக் கடவுளின் பிறப்பினைக் கூறும் வரலாறு அவருடைய தெய்வத் தன்மையைக் குறிப்பிடுவதற்காக வந்திருக்கலாம். மக்களைப்போல் பிறந்தான் எனக் கூறாமல் ஐம்பூதங்களினின்று உருவெடுத்தான் எனக் குறிக்கப்படுகின்றது.

சூரனுக்கு விசுவரூபம் என்னும் பெருவடிவத்தை இறைவன் காட்டினதாகக் கந்தபுராணம் கூறுகின்றது. சூரனை அழிக்காமல் பெருங்கருணையுடன் வேலும் மயிலு மாக மாற்றி ஆட்கொள்கின்றார். கொடிய சூரனுக்கும் முருகன் அருள் கிடைக்கின்றது.

"தீயவை புரிந்தா ரேனும்
குமரவேள் திருமுன் உற்றால்
தூயவ ராகி மேலைத்
தொல்கதி அடைவ ரென்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ
அடுசமர் முன்னாட் செய்த
மாயையின் மகனும் அன்றோ
வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்"

"வேலும் மயிலும் துணை" என்ற சொற்றொடரில் வேலென்பது இறைவனது பேரறிவையும் மயிலென்பது அவ்வறிவுக்கு உட்பட்ட உயிரின் அறிவையும் குறிக்கும். இதனால் அறிவுக்கு அறிவாய் நிற்கும் இறைவனது ஆற்றல் நினைவூட்டப்படுகின்றது.

இறைவன் அறுமுகத் திருவுருவங்கொண்டு சூர ஆட்கொண்ட திறத்தினையே புராணமாக விரித்துக் கூ பட்டிருக்கின்றது. அறுமுகப் பெருமான் முழுமு கடவுள் என்பதனைக் கந்தபுராண ஆசிரியர் வற்புறு கின்றார்.

"அருவமு முருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலக முய்ய."

கார்த்திகைப் பெண்களிடம் ஆறு குழந்தைகளு இருந்து வளர்க்கப்பட்டார் என்பது ஐம்புலன்களும் ம மும் நல்ல பயிற்சி பெறுவதைக் குறிக்கும். சிவம் ச இரண்டும் சேர்ந்து அமையப் பெற்றவன் முருகன். சி யிடம் விழைவாற்றல், அறிவாற்றல், செயலாற்றல் ஆ மூன்று இயல்புகள் சேர்ந்து விளங்குகின்றன. மு னிடத்திலும் இம் மூன்றும் சேர்ந்து மிளிர்வ காணலாம்.

சிவமும் சக்தியும் இணைபிரியா திருக்கின்றனர். வத்தையும் அதன் ஆற்றலையும் பிரித்து வைத்து உ முடியாது. இரண்டினையும் ஒன்றுபடுத்துவதைத் மணம் என்கிறோம். நாம் அவர்களுக்கு மணம் முடி வைத்துக் கொண்டாடுகிறோம். விழைவாற்றல் வ யம்மையாகக் காட்சிபளிக்கின்றது. அன்புக்கும் அ கிளைகளாக வரும் உணர்ச்சிகளுக்கும் பிறப்பிடம் வி வாற்றலாகும். அன்புக்கு உட்பட்டு முருகன் வள்ளி மணந்து கொள்கிறான். வள்ளிதிருமணத்தில் பல வி யாடல்களைக் காணுகின்றோம். இறைவனுடைய சக்தி வமே வள்ளி என்பது அதன் உட்கருத்தாகும்.

"வெற்றிவேல் உற்றதுணை"

எனக் கூறுகின்றோம். கதிர்வேலவன் கையில் வேலு அறிவுச் சுடராக வீற்றிருக்கின்றான்.

தேவர்களால் வளர்க்கப் பெற்ற சக்தி தெய்வயானை என்றும் தேவ குஞ்சரி என்றும் பெயர்படைத்திருக்கின்ருள். வானவர்கள் தங்களிடமிருந்த சக்தியை முருகப்பெருமானுக்கு மணமகளாகக் கொடுத்தனர். முருகனுடைய ஆற்றலை அவர்கள் அறிந்துகொண்டனர் என்பதே அதன் பொருள். இறைவனிடமுள்ள சக்தியை உணர்ந்து கொண்டதே அவனுக்கு அதனை மணம் முடித்து வைத்ததாகும்.

முருகன் உலகமெங்கணும் இயற்கையின் அழகில் இலங்குகின்ருன். இயற்கையில் எங்கே பார்க்கினும் சிவசக்தியின் பொலிவு புலனுகின்றது. அன்பும் அறிவும் ஆற்றலும் தாண்டவ மாடுகின்றன. தன்னைத்தானே ஓயாது புதுப்பித்துக் கொண்டிருப்பது இயற்கையின் விளையாட்டு. இதனையே முருகன் இளமையில் செய்த திருவிளையாட்டுகளாகப் புராணம் கூறுகின்றது.

எல்லாவகையான அழகும் திரண்டு உருவெடுத்தவன் முருகன். தெளிந்த மனமுடையவர்கள் அழகுத் தெய்வத்தை எங்கும் காணலாம். பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் முருகன். முருகனுக்கு மயில் ஊர்தியாக அமைந்திருக்கின்றது. அஃது ஒரு பாம்பின்மேல் நின்று கொண்டு தோகையை விரித்து ஆடுகின்றது. வடிவேலன் சக்தியை முற்றும் ஆளுகின்ருன் என்பது இதன் கோட்பாடு. பறவை இனத்தில் மயில் மிகவும் அழகானது. இயற்கையிலுள்ள அழகெல்லாம் முருகனைச் சார்ந்தவை என்பதையும் மயில் வாகனம் விளக்குகின்றது.

வாழ்க்கையில் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று விளையாட்டு, மற்றென்று போராட்டம். போராட்டமில்லாத வாழ்வு கிடையாது. வாழ்க்கைத் தத்துவத்தை விளக்குவது வேலனுடைய விளையாட்டு. எல்லா அண்டங்களுக்கும் தலைவனுக இருப்பவன் சூரனை எதிர்த்துப் போர்புரிகின்ருன். நமது உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் அசுரஇயல்போடு நாம் போராடியாக வேண்டும். ஆணவம், ஆசை,

பகைமை முதலியவற்றை அசுரர்கள் என்று உருவ படுத்தியுள்ளனர். மனத்தில் எழும் தீய எண்ணங்க அசுரப்படையாகும். முருகப் பெருமான் அசுரர் கூட்டத் வேருடன் களைந்து வெற்றிவாகை சூடுகின்றார்.

சேனைத்தலைவனாகிய முருகனை வழிபடுகின்றவர் மனத்தகத்தில் முளைத்துவரும் அற்ப எண்ணங்க அறவே அகற்றவேண்டும். அவற்றைப் போக்குகின் வர்கள் முருகனுக்கு உண்மையான அன்பர்களாகின் னர். அவன் அருளைக் கொண்டு மனத்தின் மாசி அகற்றி முருகப் பெருமானை அடையலாம்.

எல்லாவற்றையும் கடந்து நிற்கும் முழுமு கடவுளைக் கங்கையின் புதல்வனென்றும், கார்த்தி பெண்களால் வளர்க்கப்பட்டவன் என்றும், திருமா மருகன் என்றும் கூறுவது உலகவழக்கு. முரு பெருமான் முடிவிற்கு முடிவாய், ஆதிக்கு ஆதியா உயிர்க்குயிராய் நிற்பவன். அவன் அருவமாகவும் உரு மாகவும் இருப்பான். முருகன் பெருமையை எவரா அளவிட்டுச் சொல்ல முடியும்?

"கங்கைதன் புதல்வனென்றும்
கார்த்திகை மைந்தனென்றும்
செங்கண்மால் மருகனென்றும்
சேனையின் செல்வனென்றும்
பங்கயன் முதலோர் தேருப்
பரஞ்சுடர் முதல்வன் தன்னை
இங்கிவை பலவுஞ் சொல்வதேழைமைப்
பாலதன்றோ?"

புராணங்கள் மூன்றுவகைப்படும். ஒன்று மெ வரலாறுகளைத் தெரிவிப்பது. மற்றொன்று தத்துவ நுட்ப களை உலகினர் அறியும்பொருட்டுக் கதைகளாகப் புனை உரைப்பது. இன்னொன்று பொய்யே புகல்வது. இவை யெல்லாம் தத்துவ ஆராய்ச்சி குன்றிய காலத்தி பொழுது போக்குக்கென இயற்றப்பட்டன. கடவு

இலக்கணத்திற்குப் பொருத்த மில்லாத கதைகளை ஒதுக்கி விட்டு உண்மை வரலாறுகளைப் படிக்கலாம்.

முருகன் தோற்றத்தைப்பற்றி ஆராய்ந்தால் அவன் இயற்கை முதல்வன் என்பது புலப்படும்.

"காணொ ணாதது உருவோ டருவது
பேசொ ணாதது உரையே தருவது
காணு நான்மறை முடிவாய்
நிறைவது—பஞ்சபூதக்
காய பாசம தனிலே யுறைவது
மாய மாயுடல் அறியா வகையது"

என அருணகிரியார் போற்றியுள்ளார்.

முருகன் சிவபெருமான் நெற்றிக் கண்ணில் தோன்றிக் காற்றாலும் நெருப்பாலும் தாங்கப்பெற்றுச் சரவணப் பொய்கையில் குழந்தையாய் மண்ணுலகில் திருவிளையாடல் புரிந்தான் என்று புராணம் கூறுகின்றது. இதனை ஆராய்ந்தால் முருகன் மண், புனல், தீ, வளி, வெளி என்னும் ஐந்து பூதங்களுக்கும் காரணன் என்பது புலனாகும். இவ்வுண்மை கண்ட கச்சியப்ப முனிவர்,

"ஓங்கொளியாய் விசும்பாதி தொறுமியலுந்
தனதியல்பை உருவின் மாட்டும்
பாங்குபெறத் தெரித்ததுபோற் பலபொறியாய்ப்
பரமர்விழி பயந்த ஞான்று
தேங்கொளியாய் வெளியடர்ந்து வளிதொடர்ந்தொள்
ளொளிபடர்ந்து தெளிநீர் புக்கு
நீங்கிவிளை யாட்டயர்ந்து தணிகையமர்
பெருவாழ்வை நினைந்து வாழ்வாம்"

எனப் பாடுகின்றார். முருகப் பெருமான் இயற்கை முதல்வன் என்பதைப் புராணம் அறிவுறுத்துகின்றது.

உயிர்கள் பெறவேண்டிய இன்பத்திற்கு மெய்யறிவு இன்றியமையாதது. மெய்யறிவிற்கு வேண்டற்பாலது

உண்மை. உண்மையும் மெய்யறிவும் விளங்கும்போ இவற்றுடன் பிறப்பது இன்பம். உண்மையைத் தந்
யாகிய சிவம் என்றும், அறிவைத் தாயாகிய உ
யென்றும், இன்பத்தைச் சேயாகிய முருகனென்
புராணம் கூறும். இன்பமயமாக இருக்கும் ஆண்டவ
முருகன்.

"அருவமு முருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலக முய்ய"

"ஈச னேஅவ னுடலான் மதலையா யினன்காண்
ஆசி லாஅவ னறுமுகத் துண்மையா லறிநீ
பேசி லாங்கவன் பரனொடு பேதக னல்லன்
தேசு லாவகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல்

"ஆதலின் நமது சத்தி அறுமுக னவனும் யாமும்
பேதக மன்று னம்போல் பிரிவிலன் யாண்டு நின்றான்
ஏதமில் குழவி போல்வான் யாவையு முணர்ந்தான் சீரும்
போதமு மழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்"

என்ற பாடல்களால் சிவனும் முருகனும் ஒன்று என்ப
பெறப்படும்.

கந்தபுராணம் ஓதுவதன் பயனைக் கச்சியப்பர் பி
வருமாறு கூறுகின்றார் :

"இந்திரர் ஆகிப் பார்மேல்
இன்பமுற்(று) இனிது மேவிச்
சிந்தையில் நினைந்த முற்றிச்
சிவகதி அதனிற் சேர்வர்
அந்தமில் அவுணர் தங்கள்
அடல்கெட முனிந்த செவ்வேல்
கந்தவேள் புராணந் தன்னைக்
காதலித்(து) ஓது வோரே."

உயிர்கள் குறைவின்றி வாழ்க என வாழ்த்துகின்

# 3. முருகன் அருள் பெற்ற அடியார்கள்

முருகன் அருள் பெற்றவர்களில் அகத்தியர், சிதம்பரசுவாமிகள், பகழிக்கூத்தர், மார்க்கசகாய தேவர், இராமலிங்க அடிகள், முருகதாச அடிகள், பாம்பன் அடிகள், கச்சியப்ப சிவாச்சாரியார், நக்கீரர், ஔவையார், அருணகிரிநாதர், குமரகுருபரர் போன்ற அடியார்கள் முன் வரிசையில் வைத்து எண்ணப்படுவர்.

அகத்தியர் முருகப் பெருமானிடம் உபதேசம் பெற்றவர்.

"சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே"

என்பது திருப்புகழ்.

சிதம்பர சுவாமிகள் திருப்போரூர் முருகன் அருள் பெற்றவர். திருப்போரூர் சந்நிதிமுறை பாடியவர்.

பகழிக்கூத்தர் என்ற அடியவர்க்குத் தீராத வயிற்றுவலி வந்தது. திருச்செந்தூர் வந்து "பிள்ளைத் தமிழ்" பாடினர். உடனே வயிற்றுவலி நீங்கிற்று.

மார்க்க சகாய தேவர் சிறந்த முருகனடியாராகத் திகழ்ந்தவர். திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார்.

இராமலிங்க அடிகள் இளமையிலேயே முருகனிடம் அன்பு பூண்டு ஒழுகிவந்தார். திருத்தணி முருகன் அவருக்குக் கண்ணாடியில் காட்சியளித்தார்.

"ஒருமையுடன் நினது திரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகலவாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும்பொய்மை
பேசா திருக்க வேண்டும்"

எனப் பாடுகின்றார்.

முருகதாச அடிகள் திருநெல்வேலியில் சைவ வேளா மரபில் தோன்றியவர். இவரை வண்ணச் சரபம் தண் பாணி அடிகள் என்றும் அழைப்பார்கள். ஒரு லட்சம் க பாடியவர். திருவாமாத்தூரில் சமாதியடைந்துள்ளார்.

பரம்பன் அடிகள் பாம்பன் என்னும் பதியில் தோன்றி வர். ஆருயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைப் பாடியவ குமார சுவாமியம், பரிபூரணனந்த போதம் முதலிய நூ களை இயற்றியவர். கால் முறிந்து சென்னை மருத்துவமனை யில் இருந்தபோது வானம் மறையும்படி மயில் வந்து ஆடிக் காட்சியளித்தது. உடைந்த கால் கூடி நலமடை தார். திருவான்மியூரில் சமாதியடைந்தார்.

கச்சியப்ப சிவாச்சாரியார் காஞ்சீபுரத்தில் குமரகோட் டத்தில் அர்ச்சகராக இருந்தார். கந்தபுராணத்தைப் பாடி அரங்கேற்றம் செய்தார்.

"இந்திர ராகிப் பார்மேல்
இன்பமுற் றினிது மேவிச்
சிந்தையில் நினைந்த முற்றிச்
சிவகதி யதனில் சேர்வர்
அந்தமில் அவுணர் தங்கள்
அடல்கெட முனிந்த செவ்வேல்
கந்தவேள் புராணந் தன்னைக்
காதலித்(து) ஓதுவோரே"

என நூற்பயன் கூறுகின்றார்.

"வான்முகில் வழாது பெய்க
மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க
குறைவிலா(து) உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க
நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலகமெல்லாம்"

என வாழ்த்துகின்றார்.

நக்கீரர் சங்கப் புலவர்களுக்குத் தலைவராக விளங்கினார். முருகப்பெருமானிடம் தமிழ் இலக்கணம் பயின்றவர். கற்கிமுகி என்ற பூதம் இவரை மலைக்குகையில் அடைத்தபோது "திருமுருகாற்றுப்படை" பாடினார். முருகன் கைவேல் பூதத்தைக் கொன்று நக்கீரரைக் காப்பாற்றியது.

"துரகமுகக் கோதைக்கிடை
புலவரில் நக்கீரர்க்குதவிய வேளே"

என்பது திருப்புகழ்.

ஔவையார் பல நீதி நூல்களை இயற்றியவர். முருகப்பெருமானுடன் நேரில் பேசியவர். ஒருநாள் வெயில் நேரத்தில் ஔவையார் நாவல் மரத்தடியில் ஒதுங்கி நின்றார். மாடு மேய்க்கும் பையனைப் போல் முருகப்பெருமான் மரத்தின்மேல் வீற்றிருந்தார். "நாவற்பழங்களைப் பறித்துப் போடு" என்று ஔவையார் கேட்டார்.

'சுடுகிற பழம் வேண்டுமா சுடாத பழம் வேண்டுமா?' என்று பையன் கேட்டான். ஔவையார் சற்றுக் குழப்பமடைந்து 'சுடுகிற பழம் எப்படி இருக்க முடியும்? போடு பார்க்கலாம்' என்றார். பையன் கனிந்த பழங்களைப் பறித்து மண்ணில் போட்டான். ஔவையார் அவற்றை எடுத்து ஒட்டிய மண்ணை நீக்குவதற்காக வாயால் ஊதினார்.

'நாவற்பழம் சுடுமா? என்று கேட்டாயே பாட்டி! இ பொழுது ஏன் வாயால் ஊதுகிறாய்?' என்று கேட்டு நகை தான். அப்போதுதான் பையன் சொன்ன கருத் ஔவையாருக்கு விளங்கிற்று. 'நாம் இந்தச் சிறுவனிட தோற்றோமே' என்று வியந்து நின்றார்.

"கருங்காலிக் கட்டைக்கு நாணாத கோடாரி
இருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானில்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்தோற்ற(து)
ஈரிரவு துஞ்சாதென் கண்"

எனக் கூறி வருந்தினார். பையன் முருகப்பெருமா மாறி நின்றான். ஔவையார் முருகக் கடவுளை வாழ்த் வணங்கினார்.

'யான் உன்னுடன் சிறிய விளையாடல் புரிந்தேன் வருந்தாதே' என்றார். அப்பொழுது அருமையா கருத்துகளை ஔவையார் மூலமாக வெளிப்படுத் கின்றார். "இவ் வுலகில் கொடியது யாது?" என முருக வினவினார்.

"கொடியது கேட்கின் நெடிய வெவ்வேலோய் என்று தொடங்கி "அன்பிலாப் பெண்டிரின் கையி உண்பது மிகவும் கொடியது" என்றார் ஔவையார்.

'இனியது எது ?'

'அறிவுள்ளோரைக் கனவிலும் நனவிலும் காண்பதே இனியது'.

'பெரியது யாது ?'

'தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே'.

'அரியது யாது ?'

"அரிதரிது மானிட ராதல் அரிது
மானிட ராயினும் கூன்குருடு செவிடு

பேடு நீங்கிப் பிறத்த லரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமும் கல்வியும் நயத்த லரிது
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமும் தான்செய்த லரிது
தானமும் தவமும் தான்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே''

என்று பாடினர். முருகக் கடவுள் அவரை வாழ்த்தி மறைந்தருளினர். சுந்தரர் கைலைக்குச் சென்றபோது ஔவையாரும் ஆனைமுகக் கடவுளுடைய திருவருளால் கைலைக்குச் சென்ருர் என வரலாறு கூறுகின்றது.

அருணகிரிநாதர் இளமையில் உலக இன்பத்தில் உழன்று நோயுற்ருர். திருவண்ணுமலைக் கோபுரத்தின் மேல் ஏறிக் கீழே குதித்தார். முருகப் பெருமான் அவரை அன்புடன் தாங்கி அணைத்துக்கொண்டார். அருட்குருவாகத் தோன்றி அருளுரை வழங்கினர். முன் செய்த தவத்தின் பயனுய் முருகன் அவருக்குக் காட்சியளித்து அவருடைய நாவில் பிரணவ மந்திரத்தை எழுதினுர். அருணகிரிநாதருக்குப் பாடும் திறத்தை வயலூரில் வழங்கினுர்.

''முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர—எனஓதும்''

எனத் தொடங்கி,

''கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல—பெருமானே''

என்று முடித்தார். முருகன் திருக்கோவில்களுக் கெல்லாம் சென்று திருப்புகழ் பாடினுர். விராலிமலையில் முருகன் அவருக்கு அட்டமாசித்திகளை வழங்கினுர். பழநி மலையில் செபமாலை தந்தார். சென்னிமலையில் படிக்காசு

வழங்கினர். திருச்செந்தூரில் திருநடனம் செய்து கா டினர். திருவேரகத்தில் பிரணவ மந்திரத்தை உபதேசி தருளினர்.

வில்லிபுத்தூராரைக் கந்தரந்தாதி பாடி வாதி வென்று அறிவுரை கூறினர். சம்பந்தாண்டானுட வாதம் புரிந்து அரசரவையில் முருகனை மயில்மீது வ வழைத்துக் காட்டினர்.

"அதலசேட னாராட அகிலமேரு மீதாட
அபினகாளி தானுட அவளோடன்
றதிரவீசி வாதாடும் விடையிலேறு வாராட
அருதபூத வேதாள மவையாட
மதுரவாணி தானுட மலரில் வேத னாராட
மருவுவானு ளோராட மதியாட
வனசமாமி யாராட நெடியமாம னாராட
மயிலுமாடி நீயாடி வரவேணும்"

எனத் திருப்புகழ் பாடி முருகனை அழைக்கின்றார்.

மன்னன் நோய் தீர்க்கும்பொருட்டு அருணகிரியா தமது உடம்பைக் கோபுரத்தில் வைத்துவிட்டுக் கிளி உருவத்துடன் மலர் கொண்டுவரச் சென்றார். சம்ப தாண்டான் அவருடைய உடலை மறைத்துவிட்டான் அதனல், கிளியாகவே இருந்து 'கந்தரநுபூதி' 'திருவகுப்பு இவற்றைப் பாடிப் பெருவாழ்வு பெற்றார்.

"கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொற்ற
எந்தை அருணாடி யிருக்கும்நாள் எந்நாளோ"

எனத் தாயுமானர் போற்றுகின்றார்.

குமரகுருபரர் திருவைகுண்டம் என்ற ஊரின் அருகில் கைலாசபுரம் என்னும் பகுதியில் தோன்றினர். ஐந்தாண் டுகள் வரை ஊமையாக இருந்ததால் தாய்தந்தையா திருச்செந்தூர் கோவிலுக்குச் சென்று தவங்கிடந்தனர். முருகன் அருள் கிட்டவில்லை யென்று கடலில் வீழ்ந்து

உயிரை மாய்க்கத் துணிந்தனர். முருகப்பெருமான் அருளினால் குழந்தை பேசிற்று. குமரகுருபரர் சிறந்த அறிவாற்றல் பெற்றுக் கந்தர் கலிவெண்பாவைப் பாடினார். மதுரைக்குச் சென்று மீனாட்சியம்மன் பிள்ளைத் தமிழ் பாடினார். அதனை அரங்கேற்றும் போது மீனாட்சியம்மன் குழந்தை வடிவத்தில் வந்து நாயக்கமன்னன் கழுத்திலிருந்த நவரத்தினமாலையை எடுத்துக் குமரகுருபரருடைய கழுத்தில் அணிந்துவிட்டு மறைந்தருளினார்.

வைத்தீசுரன் கோவிலில் முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ் பாடினார். சிதம்பரத்தில் சிதம்பர மும்மணிக்கோவை பாடினார்.

பிறகு காசிக்குச் சென்று தவம் செய்தார். துருக்க மொழியில் பேசும் திறமை பெற்று முகலாயமன்னனுக்காக விரிவுரை நிகழ்த்தினார். அவனுடைய உதவியால் குமாரசாமி மடாலயத்தைக் கட்டிமுடித்துக் காசியிலேயே இறைவனடி சேர்ந்தார்.

வடநாட்டில் முருகன் கோவில் அதிகமாய்க் காண முடியாது. சிவன், திருமால், பிள்ளையார், அனுமன் கோயில்கள் இருக்கின்றன. இராமனும் கண்ணனும் பல இடங்களில் காட்சியளிக்கின்றனர். தமிழ்நாட்டில் எங்கே பார்த்தாலும் தமிழ்த் தெய்வத்தின் அழகைக் காணலாம். முருகன் தமிழ்நாட்டின் செல்வமுத்துக் குமரனாக ஒவ்வோர் இல்லத்திலும் விளங்குகின்றான்.

விழுப்புரத்தை அடுத்த திருவாமாத்தூரில் வண்ணச் சரபம் தண்டபாணி அடிகள் சிறந்த முருகனடியாராக விளங்கினார். தென்பெண்ணை ஆற்றங்கரையில் சிவன் கோவிலில் மிகவும் அழகிய ஆறுமுகப் பெருமானைக் காணலாம். வள்ளிதெய்வயானையுடன் பெரிய உருவில் மயிலின்மேல் காட்சி தருகின்றார். குன்றக்குடியிலும் முருகன் ஆறுமுகங்களுடன் காட்சியளிக்கின்றான். திருநெல்வேலியில் நெல்லையப்பர் கோவிலில் ஆறுமுகம்

பெருமான் மயில் வாகனத்தின்மேல் மிகவும் அழக
வீற்றிருக்கின்றார்.

ஆண்டுதோறும் ஆகஸ்டு 15ஆம்நாள் திருவண்
மலையில் அருணகிரிநாதர் திருவிழா மிகச் சிறப்பாக நட
பெறுகின்றது. அருணகிரியாரின் கவித்திறத்தைப் பே
றிய அன்பர்கள் அவருக்கு 'முத்தமிழ் அரசு' 'சந்தக் கவி
தலைவர்' 'இசைஞானியார்' 'தாளச் செல்வர்' என்ற
பட்டங்களை வழங்கியுள்ளனர்.

# 4. ஓங்காரத்தின் உண்மை

ஓங்காரம் என்பது எல்லா ஒலிகட்கும் முதன்மையாக அமைந்துள்ளது. ஒருவர் தமது காதைக் கையால் அடைத்துக் கேட்கும்போது ஓவென்று இரைதல் காதில் விழும். கடலின் அருகிலும் இந்த ஓசையைக் கேட்கலாம். செயற்கையாக எழும் ஏனைய ஓசைகளை யெல்லாம் அடக்கி இவ்வோசை இயற்கையாய் ஒலிக்கின்றது.

உலகம் எங்கணும் ஓயாது ஒலிக்கும் இவ்வோசை யினால் உந்தப்பட்டு உலகங்களும் உலகத்திலுள்ள பல் வகை உடம்புகளும் இயங்குகின்றன. இவ்வோசை படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களை இயற்றவல்லதாக இருக்கின்றது. ஓசை இயங்கும் முறையாலும் இபக்கப்படும் முறையாலும் அணுக்களைக் கூட்டியும், நிலைபெறச்செய்தும், பிரித்தும் தொழில்புரி கின்றது.

ஓங்கார ஒலியைப் பகுத்துப்பார்த்தால் அ+உ+ம் என்னும் மூன்று ஒலிகளாய்ப் பிரியும். அகர ஒலி முதலில் பிறந்து படைத்தல் தொழிலைப் புரிகின்றது.

உகாரஒலி அதன்பின்னே தோன்றிப் பொருள்களை அவற்றின் கால எல்லையளவு நிலைபெறச் செய்யும்.

மகாரஒலி நிலைத்திருக்கும் பொருள்களை அழிந்து போகச்செய்யும்.

இம் மூன்று ஒலிகளையும் அடக்கி நிற்கும் ஓங்காரம் மிகவும் சிறப்புடையதாக இருக்கின்றது.

ஓங்காரத்தில் சிவம் சக்தியுடன் மூனைத்துவிளங்குகின் றது. எப்பொழுதும் அழியாத பொருள் ஓங்காரத்தில்

அடங்கி இருக்கின்றது. முக்காலத்தையும் கடந்து நிற்பது ஓங்காரமே. எல்லா உயிர்களின் நெஞ்சத்திலும் இறைவன் ஓங்காரமாய் நிற்கின்ருன்.

ஓங்காரம் எல்லா மொழிகட்கும் பொதுவாக இருந்தாலும் அது தமிழுக்கே உரியதெனக் கூறுவர். ஓம் என்னும் ஒலியில் இனிய மெல்லோசை நிறைந்திருக்கின்றது. ஓசையைக் குறிக்கின்ற 'ஓசை', 'ஒலி' என்னும் தமிழ்ச் சொற்களின் முதலில் ஓகாரம் நிற்கின்றது.

நமது உடம்பின் உள்ளே சிறந்த உறுப்புகள் அனைத்தும் ஓங்கார வடிவுடன் காணப்படுகின்றன. கருப்பையுள் வளரும் சருவும் முதுமைப் பருவம் வந்தபின் உடலில் காணப்படும் கூன்வடிவும் ஓகார வடிவில் காணப்படும்.

"தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண் மதிசூடி' என்னும் தேவாரப்பாடலில் திருஞானசம்பந்தர் ஓகாரத்தை முதலில் வைத்திருக்கின்ருர்.

"ஆடும் பரிவேல் அணி சேவலென" என்ற கந்தரநுபூதிப் பாடலில் 'ஆடும்' என்ற சொல்லில் அ+உ+ம் என்னும் ஓங்காரத்தை அருணகிரியார் முதலில் வைத்துப் போற்றுகின்ருர்.

எம்மொழிக்கும் இல்லாத தனிச்சிறப்பு தமிழ்மொழிக்கு உண்டு.

"ஓமெனும் ஓங்காரத் துள்ளே ஒருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே".

—திருமந்திரம், 2627

"ஓங்காரமாம் ஐந்தெழுத்தால் புவனத்தை உண்டுபண்ணிப்
பாங்காய் நடத்தும் பொருளே அகண்டசிவமே"

எனத் தாயுமானுர் பாடுகின்ருர்.

நூற்றெண்பது பாகை (டிகிரி) சுழற்றினால் ஒகரம் அகரமாகவும், அகரம் ஒகரமாகவும் மாறுகின்றன. பிரண வத்தின் பகுதிகளை அகரம் தன்னகத்தே அடக்கிக் கொண் டிருக்கின்றது. அகரத்தை அ, உ, ம் என முப்பகுதி களாகப் பிரிக்கலாம். அகர எழுத்தினைப் பகுத்தெடுத்து அவற்றைத் திருப்பி அமைத்து ஓம் நமசிவய, ஓம் சரவணபவ என்னும் மந்திரங்களைத் தோற்றுவிக்கலாம்.

தாயுமானவர் யாவற்றினும் உயர்ந்த பொருளை அகர உயிருக்கு ஒப்பிடுகின்றார். அகர உயிர் எல்லா எழுத்தையுமாக்கி அவற்றினின்றும் வேறுபட்டு நிற்கின் றது.

"அகரஉயிர் எழுத்தனைத்தும் ஆகி வேறாய்
அமர்ந்ததென அகிலாண்டம் அனைத்து மாகிப்
பகர்வனஎல் லாமாகி யல்ல தாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகி."

சிவஞான சித்தியாரில் அகரம் சிவபெருமானுக்கு உவமையாக்கப்படுகின்றது:

"அக்கரங்கள் தோறும் சென்றிடும்
அகரம் போல நின்றனன்
சீவனும் சேர்ந்தே"

திருவருட்பயனில்,

"அகர உயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து"

எனக் கூறப்பட்டிருக்கின்றது.

தென்முகக் கடவுள் (தட்சிணாமூர்த்த) வடிவத்தில் ஒகரத்தின் சாயல் தெரிவதை ஆராய்ச்சியாளர்கள் படம் வரைந்து காட்டியுள்ளனர். ஒகரத்தை அகரமாக்கும் போது சிவனது இடக்கால் மேலே தூக்கப்பட்டு நிற்பது போல் கூத்தப்பிரானின் வடிவமாகின்றது.

ஓகரம் இயற்கை வடிவங்களோடு ஒத்திருக்கின்றது. மனிதனுடைய மூளையைப் பகுத்துப்பார்த்தால் ஓகர எழுத்துப் புலப்படுகின்றது. குடல்களெல்லாம் ஒன்று சேர்ந்து ஓகர வடிவமாக நிற்கின்றன. கருவளர்ச்சியிலும் ஓகர வடிவம் தெரிகின்றது.

தமிழ்மொழி மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றது. தமிழ் எழுத்துக்களின் உருமாற்றமும் மொழியின் அமைப்பும் மறைத்தன்மையுடன் விளங்குகின்றன. மறைமலை அடிகளும் பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்களும் இதனை நன்ருக ஆராய்ந்து விளக்கிக் காட்டியுள்ளனர்.

முருகன் சிவபெருமானுக்குப் பிரணவ மந்திரத்தின் பொருளை உரைத்ததாக ஒரு கதை வழங்கி வருகின்றது. அதனால் அவர் சிவகுரு, சுவாமிநாதன், தகப்பன்சாமி என்னும் பெயர்களைப் பெற்றுள்ளார்.

சிவனும் முருகனும் ஒன்று என்பதனை,

''ஈசனே அவன் ஆதலால்
மதலையாயினன் காண்''

எனக் கந்தபுராணம் கூறுகின்றது. அரனுர் தமக்குத் தாமே மகனுகித் தமக்குத்தாமே அருளுரை பகர்ந்தார் எனக் கொள்ளவேண்டும்.

''தனக்குத்தா னேமக னுகிய தத்துவன்
தனக்குத்தா னேயொரு தாவருங் குருவுமாய்த்
தனக்குத்தா னேயருள் தத்துவம் கேட்டதும்
தனக்குத்தான் நிகரினன் தழங்கிநின் ருடினன்.''

இக்கதையின் மூலம் குருவும் சீடனும் எப்படி இருக்க வேண்டுமென்பதை எம்பெருமான் உலகிற்கு உணர்த்துகின்ருர்.

ஒருமுறை திருக்கயிலையில் சிவபெருமானுடைய திருக்கோயிலின் ஒருபுறத்தில் ஆறுமுகப் பெருமான்

அமர்ந்திருந்தார். பிரமன் சிவபெருமானைக் காணவந்தான். முருகனைக் குழந்தையென்று எண்ணி வணங்காமல் சென்றான். உள்ளே சென்று சிவபெருமானையும் உமாதேவியாரையும் தொழுது வணங்கி விட்டுத் திரும்பிவந்தான். முருகப்பெருமானைக் கண்டும் காணாதவன்போல் சென்றான்.

முருகப்பெருமான் வீரவாகுதேவரை அனுப்பி அவனைத் தம்மிடம் வரவழைத்தார். “பிரணவத்திற்குப் பொருள் தெரியுமா?'' என்று கேட்டார். பிரமன் பொருள் தெரியாது விழித்தான். முருகன் அவன் தலையில் குட்டிச் சிறையில் அடைத்துவிட்டார். தாமே படைத்தல் தொழிலைப் புரியத் தொடங்கினார்.

தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவபெருமான் கட்டளைப்படி முருகன் பிரமனைச் சிறையிலிருந்து விடுதலை செய்தார்.

சிவபெருமான் பிரணவ மந்திரத்தின் பொருளைக் கூறும்படி முருகனிடம் கேட்டார். முருகன் குருவாகவும் சிவபெருமான் சீடராகவும் அமர்ந்து அவருடைய திருச்செவியில் மறைகளின் முதல் மந்திரமாகிய பிரணவத்தின் பொருளை ஓதியருளினார்.

''சிவனார் மனங்குளிர உபதேசமந்த்ரம் இரு
செவிமீதிலும் பகர்செய் குருநாதா''

என அருணகிரியார் பாடுகின்றார்.

''நாதா குமரா நமஎன்று அரனார்
ஓதா யெனஓ தியதுஎப் பொருள்தான்''

எனக் கந்தரநுபூதியில் வினவுகின்றார்.

பிரணவம் சிவபெருமானுக்குரிய மந்திரம்; எல்லா எழுத்துக்களுக்கும் வேதங்களுக்கும் முதன்மையாக இருப்பது. அது பிறவிக்கடலைத் தாண்டச் செய்யும் மந்திரமாக

இருப்பதால் தாரகமந்திரம் என்பார்கள். ஓங்காரத் துக்குள் எல்லா மந்திரங்களும் அடங்கியுள்ளன.

"ஓங்கார உள்ளொளிக்குள் முருகன் உருவம்கண்டு
தூங்கார்என் செய்வார் யம தூதருக்கே."

(கந்தரலங்காரம்)

முருகன் சிவபெருமானுக்கு அருளுரை வழங்கிய தனை,

"கொன்றைச் சடையர்க்கு ஒன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே"

என அருணகிரியார் பாடுகின்றார்.

சிவபெருமான், அகத்தியர், அருணகிரிநாதர் இம் மூவர்க்கும் முருகனால் அருளுரை வழங்கப் பட்டதெனப் புராணம் கூறுகின்றது.

"வேலா சரணம் சரணம்என்
மேல்வெகு ளாமல் இனி
மேலா யினும்கடைக் கண்பார்
பருப்பத வேந்தன்மகள்
பாலா குருமுனி யார்க்கும்
திருப்புகழ் பண்ணவர்க்கும்
ஆலால முண்டவர்க் கும்உப தேசித்தஎன்
ஆண்டவனே"

என முருகர் அந்தாதி மொழிகின்றது. பண்டைத் தவவலி மையால் முருகப்பெருமான் அருணகிரியார் முன்தோன்றி "சும்மா இரு சொல்லற" எனக் கூறி மறைந்தருளினார். உடனே அருணகிரியார் சிவயோக சமாதியில் அமர்ந்து விட்டார். பிறகு "திருப்புகழ் பாடு" எனக் கட்டளையிட்டார். அருணகிரியார் வாக்கில் கடல் மடைதிறந்தது போல் தமிழ் வெள்ளம் பெருகிற்று.

"முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர

எனவோதும்"

என்று பாடத் தொடங்கினர். முருகன் அருளால் அறிவு பெற்றதைப் பின்வருமாறு கூறுகின்றார்:

''அறிவுமறி தத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறியென இடைப்பொழுதில் வாழ்வித்த வேதியனும்''
(திருவகுப்பு)

''யாம்ஓ தியகல் வியும்எம் அறிவும்
தாமே பெறவே லவர்தந் ததனல்'' (கந்தரநுபூதி)

ஓங்காரத்தின் உட்பொருளாய் நிற்பவன் முருகன்.

''ஓங்காரத்தின் உட்பொருளாய் நின்றான் கண்டாய்''

என்பது அப்பர் தேவாரம்.

''ஓங்காரத் துள்ஒலிக்கும் உள்ஒளியாய்''

என்பது கந்தர் கலிவெண்பா

பிரணவம் என்னும் ஓங்காரம் அகரம், உகரம், மகாரம், நாதம், விந்து என்ற ஐந்து உறுப்புகளையுடையது. அகர உகர மகரங்களாக விரியும்போது மூன்றெழுத்தாக நிற்கும். இம் மூன்றும் கூடி ஒரே எழுத்தாய் ஒலிக்கும்போது நாதமாக விளங்கும். ஓம் என்ற வரிவடிவு கொள்ளும்போது 'விந்து' எனப்படும். தொகுத்துச் சொல்லும்போது ஓம் எனவும், பகுத்துச் சொல்லும்போது அகர உகர மகர நாதவிந்து எனவும் பிரிந்து நிற்கும்.

''ஓதுவித்த நாதர் கற்க
ஓதுவித்த முனி நாண
ஓரெ ழுத்தில் ஆறெழுத்தை
ஓது வித்த பெருமானே.'' (திருப்புகழ்)

முருகப்பெருமான் ஓங்காரத்தைக் குறிக்கும் மயில்மீது ஏறி வருகின்றார். முருகனே ஓங்காரவடிவமாக விளங்குகின்றார்.

''ஓமெழுத்தில் அன்பு மிகவூறி ஓவியத்தில்
அந்தம் அருள்வாயே''

என அருணகிரியார் பாடுகின்றார்.

# 5. முருகன் பெருமை

பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவருக்கும் முத்தொழில்களை வழங்கி அவர்களுக்கு மேலாக விளங்கும் பரம்பொருள் முருகன்.

"படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்
பணித்துத் தம்பயம் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடும் தனிவேலா". (திருப்புகழ்)

முருகன் வேதாகமங்களுக்கும் எட்டாதவன். அப் பெருமானுக்கு எங்கும் திருமுகங்கள், எங்குந் திருமேனி யாக இருக்கும்:

"எங்க ணும்பணி வதனங்கள் எங்கணும் விழிகள்
எங்க ணும்திருக் கழலடி எங்கணும் கரங்கள்
எங்க ணும்திருக் கழலடி எங்கணும் வடிவம்
எங்க ணும்செறிந் தருள்செய்யும் அறுமுகத் திறைக்கே".

அவன் திருவடிகளைத் துதிக்கும் அடியார்க்குத் தன் பன்னிரு கரங்களாலும் வாரி வழங்குவான்.

"வேண்டும் அடியார் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டும் அளவில் உதவும் பெருமாளே".

பிறவிப் பிணியை ஒழித்துப் பேரின்பம் அளிப்பான். நினைத்ததைச் செய்து முடிப்பதற்குத் துணைபுரிவான். முருகனைப் பணிவார்க்கு நாளும் கோளும் நலமே புரியும்.

"நாளென் செயும்வினை தான்என்
செயும்எனை நாடிவந்த
கோளென் செயும்கொடுங் கூற்றுஎன்
செயும்கும ரேசர்இரு

தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே''.

என்பது கந்தரலங்காரம்.

வினையை அறுப்பது வேல்

''வினையோ டவிடும் கதிர்வேல்''

எனக் கந்தரநுபூதியில் வருகின்றது. அத்தகைய வேலை யுடைய முருகனை வணங்கும் அடியார்களை வினைத் துன்பம் சாராது.

முருகனை வழிபடுவோர் முருகனிடத்தில் உறுதியாக நிற்கவேண்டும். வானிடிந்து வீழினும் முருகன் காப்பான் என்ற உறுதி வேண்டும். இத்தகைய உறுதி யுடையோர் எல்லா நலங்களையும் பெறுவர். தன்னை வழிபடும் அன் பர்க்குத் துணையாய் நின்று முருகப்பெருமான் செய்து வரும் உதவி அவன் அடியவர்க்கு நன்ருகத் தெரியும். உறுதியுடையவர்கள் முருகனிடம் எல்லாம் பெறலாம். அன்பு நிலைத்திருந்தால் உறுதியும் படிந்து நிற்கும். முருகனிடம் அன்போடு பழகினல் நமக்கு வேண்டியதைப் பெறலாம்.

முருகனடியார்கள் சித்திகள் பெற்றுச் செயற்கரிய செயல்களையும் அற்புதங்களையும் நிகழ்த்தியுள்ளனர். அடியார்களுக்காக ஆண்டவன் பல அற்புதங்களை நிகழ்த்து கின்ருர்.

பண்டைத் தமிழ்மக்கள் முருகனிடம் உறுதிகொண்டு வாழ்வு நடத்தினர். இயற்கையின் அருட்செல்வம் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்திருந்தனர். நோயுற்ருல் இயற்கை மருத்துவம் செய்து வேண்டுதல் வாயிலாக நோய்களைப் போக்கிவந்தனர். நோய் தீர்ப்பதற்கு முருகனே மருத்துவனகின்ருன். இக்காலத்திலும்

நோயுற்றவர்கள் முருகனிடம் வேண்டுதல் செய்து அவன் திருக்கோயில் சென்று நோயும் குறைகளும் நீங்கப் பெறு கின்றனர்.

முருகக்கடவுள் எழுந்தருளியுள்ள ஆறுபடை வீடு களிலும் மக்கள் உறுதி மேலீட்டால் நிகழ்த்தும் செயல்களை இன்றும் காணலாம். நம்பிக்கை உடையவர்களுடைய குறைகளை முருகன் களைகின்றான். நோன்பு, வழிபாடு முதலியவற்றால் உறுதி நிலைபெறலாம். நோன்பு வேளை யில் நெஞ்சம் அன்பில் தோய்ந்து நிற்றல் வேண்டும். முருகனை நினைத்தல், அவன் திருப்புகழை ஓதுதல், ஓதக் கேட்டல் முதலிய நல்வழிகளில் நோன்பு நாள்களைக் கழித் தல் வேண்டும். நோன்பு, வழிபாடு முதலிய நல்லொழுக்க முறைகள் மக்கள் வாழ்வு குலையாதவாறு காத்து வரு கின்றன.

நோன்பு நோற்றுப் பெரும்பேறு பெற்ற சித்தர்கள் வாழ்ந்த நாடு நமது தமிழ்நாடு. முருகன் நோன்பும் வழி பாடும் இன்னும் தமிழ்நாட்டில் நடைபெற்று வருகின்றன. முருகப்பெருமான் எல்லா உலகங்களையும் நடத்தும் ஆண்டவனாக இருக்கின்றான். அவன் நோன்பும் வழி பாடும் எல்லார்க்கும் உரியன.

இயற்கையின் இனிமையே தமிழ்மொழியாக நிலவு கின்றது. தமிழ்மொழியால் முருகனைப் போற்றுவதும் பாடுவதும் சிறப்புடைமையாகும். இனிமை என்பதே 'தமிழ்' என்று வழங்குகின்றது. இயற்கை முருகனைத் தமிழ் முருகன் எனக் கூறலாம். தமிழ் முருகனைத் தமிழ் மொழியால் போற்றுதல் வேண்டும். நெஞ்சை உருக்கும் தன்மை நமது இன்பத் தமிழில் இருக்கின்றது.

அருணகிரிநாதர் முருகனையும் தமிழையும் சேர்த்துப் போற்றுகின்றார்:

'செந்தமிழ்சொல் மாலைக்கார'

'செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே'

'தண்டமிழில் மிகுநேய முருகேசா'

'தமிழ்ப்பாடல் கேட்டருள் பெருமாளே'

'செந்தமிழ் நூலோன் குமரன்'

'மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப்போன்'.

நமது அருமைத் தமிழ்மொழியால் முருகன் பெருமையைப் பாடி மகிழவேண்டும்.

காளமேகப் புலவர் ஒரு பாடலில் முருகனை இகழ்வது போல் புகழ்கின்றார் :—

"அப்பன் இரந்துண்ணி ஆத்தாள் மலைநீலி
ஒப்பரிய மாமன் உறிதிருடி—சப்பைக்கால்
அண்ணன் பெருவயிறன் ஆறுமுகத் தானுக்கிங்
கெண்ணும் பெருமை இவை"

என்று பாடுகின்றார். இதனை வடமொழியில் நிந்தாஸ்துதி எனக் கூறுவர்.

தமிழ் நாட்டின் தனிப்பெருந் தெய்வமாக விளங்குபவன் முருகப்பெருமான். இயற்கை எழில் நிறைந்த இடமெல்லாம் காட்சி தந்து நம்மை மகிழ்விக்கின்றான். முருகப் பெருமான் ஆறு திருமுகம் கொண்டதற்கு நக்கீரர் தமது திருமுருகாற்றுப்படையில்,

"மாஇருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம் ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்

கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகைஅமர்ந் தன்றே''

என்றனர்.

இருள்மிகுந்த உலகம் ஒளியுடன் திகழவும், அன்பர்கள் வேண்டியதைத் தந்தருளவும், மந்திர விதிப்படி வேள்வி நடைபெறவும், அரிய பொருள்களை முனிவர்களுக்கு அறிவிக்கவும், அசுரர்களை அழிக்கவும், வள்ளி அம்மையாருடன் இன்புற்றிருக்கவும் முருகன் ஆறுமுகங்களைக் கொண்டதாகக் கூறுகின்றார்.

குமரகுருபரர் பின் வருமாறு பாடுகின்றார்:

'வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூர னைத்தடிந்து
தெவ்வர் உயிர்சிந்தும் திருமுகமும்—எவ்வுயிர்க்கும்
ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப
வாழ்வுதரும் செய்ய மலர்முகமும்—சூழ்வோர்
வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள் யாவும்
முடிக்கும் கமல முகமும்—விடுத்தகலாப்
பாச இருள்துரந்து பலகதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும்—நேசமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோக மளிக்கும் முகமதியும்—தாகமுடன்
வந்தடியில் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளும் தெய்வமுகத் தாமரையும்''

பகைவர் உயிரை மாய்க்கவும், உயிர்களுக்கு நல்வாழ்வு தரவும், வேதாகமப் பொருளை முடிக்கவும், மெய்ப் பொருளை மக்களுக்கு உணர்த்தவும், வள்ளி நாச்சியார்க்கும் தெய்வயானை அம்மையார்க்கும் இன்பமளிக்கவும் அன்பர்களுக்கு வரம்பல வழங்கவும் முருகன் ஆறு திருமுகம் கொண்டான் என்பது பொருள்.

அருணகிரிநாதர்,

"ஆதியொடும் அந்தம் ஆகிய நலங்கள்
ஆறுமுகமென்று தெளியேனே"

எனப் பாடுகின்றார்.

முருகப் பெருமான் திருமந்திரம் "ஆறெழுத்தடங்கிய அருமறை' யாகும்.

பகைவர்களும் முருகன் பெருமையினை அறிந்து போற்றிப் புகழ்ந்துள்ளனர். சூரபதுமன் குமாரர்களில் ஒருவனான இரணியன் முருகனது பெருமையினை உணர்ந்து தன் தந்தையிடம் பின்வருமாறு கூறுகின்றான்:

"ஆறு முகத் தொருவன் ஆகும்
அமலனை அரன்பால் வந்த
சிறுவனென்று இகழன் மன்னா
செய்கையால் பெரியன் கண்டாய்
இறுதிசேர் கர்ப்பம் ஒன்றின்
ஈறிலா தவன்பால் தோன்றும்
முறுவலின் அழலு மன்றே
உலகெலாம் முடிப்ப தம்மா"

"வாசவன் குறையும் அந்தண்
மலரவன் குறையும் மற்றைக்
கேசவன் குறையும் நீக்கிக்
கேடிலா வெறுக்கை நல்க
ஆசிலோர் குழவி போலாய்
அறுமுகம் கொண்டான் எண்டோள்
ஈசனே என்ப தல்லால்
பிறிதொன்றை இசைக்க லாமோ."

சூரபதுமன் தம்பி சிங்கமுகன் அண்ணனிடம் முருகன் பெருமையைப் பேசுகின்றான்:

"சீல மில்லவர்க் குணரஒண் ணுதசிற் பரனைப்
பாலன் என்றனே அவனிடத் தில்பல பொருளும்
மேலே நாள்வந்து தோன்றிய சிறியதோர் வித்தின்
ஆலம் யாவையும் ஒடுங்கியே அவதரித் ததுபோல்"

"அருவமும் ஆகுவன் உருவமும் ஆகுவன் அருவோடு
உருவமும் இல்லதோர் தன்மையும் ஆகுவன் ஊழின்
கருமமும் ஆகுவன் நிமித்தமும் ஆகுவன் கண்டாய்
பரமன் ஆடலே யாவரே பகர்ந்திடற் பாலார்"

போர்க்களத்தில் சூரபதுமன் முருகப் பெருமானை எதிர்த்து நின்றான். அவன் தன்னை மறந்து பெருமானது இளமைக் கோலத்தில் ஈடுபட்டு முருகனுடைய அருமை பெருமைகளை உணர்ந்து போற்றிப் பரவுகின்றான் :

"கோலமா மஞ்ஞைமீது குலவிய
குமரன் தன்னைப்
பாலன்என் றிருந்தேன் அந்நாள்
பரிசிவை உணர்ந்தி லேன்யான்
மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற
மூர்த்திஇம் மூர்த்தி அன்றே."

பகைவனாலேயே இங்ஙனம் பாராட்டப்படும் பெருமையுடையவன் முருகன்.

முருகன் திருவருளைப் பெறுவதற்குக் கார்த்திகை நோன்பு, சட்டி நோன்பு ஆகியவற்றை மேற்கொள்ளலாம். முசுகுந்தன் என்ற மன்னன் சட்டி நோன்பை மேற்கொண்டதனால் முருகப் பெருமான் அவன்முன் தோன்றி அருள் செய்தான் என்பது,

"ஆன காலையில் ஆறுமா முகமுடை அமலன்
கோன வன்தனக் கருளுவான் மஞ்ஞைமேல் கொண்டு

தானை வீரனும் எண்மரும் இலக்கரும் சார
வானு ளோர்களும் கணங்களும் சூழ்வுற வந்தான்''

என்ற பாடலால் தெரிகின்றது.

ஐப்பசி மாதம் சுக்கிலபட்சம் ஆறும் திதியில் சூரன் மறைந்தான். அதற்குப்பின் விண்ணவர் தம் பழைய நிலையினைப் பெற்றனர்.

''பயிற்றும்இவ் விரதம் தன்னால்
தாரணி அவுணர் கொண்ட
தம்பதத் தலைமை பெற்றார்''

எனக் கூறப்படுகின்றது.

இத்துணைச் சிறப்பான சட்டி நாளை நாம் நோன்பு நாளாகக் கொண்டு குமரனைப் போற்றுவோம்.

''மாயையின் வலியோ னாகி
மால்முத லோரை வென்றே
ஆயிரத் தோர்எட் டண்டம்
அரசுசெய்து யுகம்நூற் றெட்டு
காயம தழிவின் றாகிக்
கடவுளற் கு அலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற
குமரன்தாள் சென்னி வைப்பாம்''

எனக் கச்சியப்பர் வணங்குகின்றார்.

தீயனாகிய சூரனும் இறுதியில் முருகன் திருவருளால் இன்பமே உற்றான். மயிலாக மாறி இறைவனைச் சுமக்கும் பேறு பெற்றான்.

மயில் தோகையை விரித்த நிலையில் முருகன் அதில் விளங்கும் தோற்றத்தைக் கண்டால் மயில் பிரணவமாக வும் முருகன் பிரணவநாதனாகவும் விளங்குதல் காணலாம். தன்னையன்றி வேறு மந்திரமில்லை என்பதை உணர்த்தி நிற்கின்றான். சேவல் நாத தத்துவத்தின் அறிகுறியாக

இருக்கின்றது. இருளை ஒழிக்கச் சூரியனை வருக, வருக என அழைக்கின்றது. மக்களை விழிப்படையச் செய்து பணியில் ஈடுபடச் செய்கின்றது. அஃதே போன்று முருகனிடம் அமர்ந்துள்ள சேவல் அன்பர்களின் அறியாமையாகிய இருளைப் போக்கி மெய்யறிவை அளிக்கின்றது. இதனைச் சிதம்பர சுவாமிகள்,

''மலஇரவு விடியமிகு துறவுணர்வு நசையறுதன்
மலிகுணக் குன்றின் முடிமேல்
மன்னுஞா னக்கதிர் எழுந்தொளி பரப்பமா
ருதுதச நாதமுழுதும்
அலகில்பவ துயில்அறக் கூவுசேவல்''

எனப் பாடுகின்றார்.

குறிஞ்சிநில மக்கள் ஊரெங்கும் விழாக்கள் நடத்தி முருகனைப் போற்றுகின்றனர் :

''அறுவர் பயந்த ஆறமர் செல்வ
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவிற் றானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவில் ஒருவ பொருவிறன் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்தர் ஏறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே
அரும்பெறன் மரபின் பெரும்பெயர் முருக''.

(திருமுருகாற்றுப்படை)

முருகனைப் போற்றினால் தெய்வமணமும் இள நலமும் காட்டி நம்முன் தோன்றுவான் என நக்கீரர் கூறுகின்றார்.

# 6. வேலும் மயிலும்

**வெற்றிவேல் :**

நமக்குத் துணையாக இருப்பது வெற்றிவேல். தெய்வங்கள் எல்லாம் தம் திருக்கைகளில் படைகளை வைத்துக்கொண்டிருக்கின்றன. அப் படைகளைக் கொண்டு தான் அன்பர்களின் பகைவர்களை அழித்து அருள் புரிகின்றன.

''கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்
வரத்தின் உலகத் துயிர்களை யெல்லாம்
வருத்தம்செய் தான்என்று வானவர் வேண்டக்
குருத்துயர் சூலம்கைக் கொண்டுகொன் றானே''

எனத் திருமூலர் கூறுகின்றார். இதற்கிணங்க முருகப் பெருமான் வேற்படையினைத் தாங்கிப் பகைவர்களை அழித்து அருள்புரிகின்றார்.

'வேல்' என்பது வெல்லும் தன்மையுடையது. அறிவாற்றலும் வெல்லும் சிறப்பும் இருப்பதனால் மக்கள் தங்கள் பெயரைத் தங்கவேல், மாணிக்கவேல், மரகதவேல், குழந்தைவேல், சிங்காரவேல், இரத்தினவேல், வெற்றிவேல், சண்முகவேல், கதிர்வேல், முத்துவேல், அருள்வேல், முருகவேல், செயவேல், சுந்தரவேல், இராசவேல், வீரவேல் என்று அமைத்துக்கொள்கின்றனர்.

''ஆடும் பரிவேல் அணிசே வலெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனியா னைசகோ தரனே''

என அருணகிரியார் பாடுகின்ருர். ஆடுகின்ற மயிலையும் வேலாயுதத்தையும், அழகிய சேவலையும் பாடுகின்ற சிறந்த பணியை எனக்குத் தந்து அருள்புரிவீராக என வேண்டு கின்ருர்.

எல்லாவற்றையும் வெல்வது அறிவாற்றல். ஆழமும் அகலமும் கூர்மையும் உடையது அறிவு. அறிவாற்றலாகிய வேலின் அடிப்பகுதி ஆழமாகவும், இடைப்பகுதி அகல மாகவும் நுனிப்பகுதி கூர்மையாகவும் இருப்பதைக் காணலாம்.

பாம்பன் சுவாமிகள்,

"வேலா யுதத்திற்கு மேலாயுதம் வேறு இல்லை"

என்கின்ருர்.

அருணகிரியார்,

'திருஞான பூரண சக்தி தரித்தருள் பெருமாளே'

எனப் பாடுகின்ருர்.

'சக்திதான் தடையிலா ஞான மாகும்'

என்பது சிவஞான சித்தியார். அறிவாற்றலையே முருகன் படைக்கலமாகக் கொண்டுள்ளான். அறியாமையாகிய இருளை அறிவாற்றலாகிய சக்திவேல் போக்கும். அது மருளைப் போக்கி அருளை நல்கும்.

"ஏயென முருகன் தொட்ட
இருதலை படைத்த ஞாங்கர்
ஆயிர கோடி என்னும்
அருக்கரில் திகழ்ந்து தோன்றித்
தீயழல் சிகழி கான்று
சென்றிட அவுணன் கொண்ட
மாயிருள் உருவம் முற்றும்
வல்விரைந்து அகன்ற தன்றே"

எனக் கச்சியப்பர் பாடுகின்ருர்.

வேல் அருள் உருவமுடையது எனவும் கூறுகின்றார் :

''புங்கவர் வழுத்துச் சிந்தும்
பூமழை இடையின் ஏகி
அங்கியின் வடிவம் நீங்கி
அருள்உருக் கொண்டு வான்தோய்
கங்கையில் படிந்து மீண்டு
கடவுளர் இடுக்கண் தீர்த்த
எங்கள்தம் பெருமான் செங்கை
எய்திவீற் றிருந்தது அவ்வேல்''.

'திருவருள் சக்தி வடிவான வேல்'

என 'வேல் அலங்காரம்' வழுத்துகின்றது.

''வேலை வணங்குவது நமக்கு வேலை'' எனப் பெரியோர் கூறியுள்ளனர்.

'வேற்படையைப் பேணிப் பரவும் பெரியோர்க்குப் பின்னைப் பிறப்பில்லையே' எனக் கூறுவர் சான்றோர். உணர்ச்சி தருவது வேல், ஊக்கம் ஊட்டுவது வேல்.

''குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பில் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல்''

என நக்கீரர் வேலின் சிறப்பினைக் கூறுகின்றார்.

வேல் செய்த வீரச் செயல்களையும் அன்பர்களுக்கு அது துணையாய் நிற்பதையும் அருணகிரியார் புகழ்ந்து பாடியுள்ளார் :

''பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும் ஒரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும்

சுரர்க்கும்முனி வரர்க்கும்மக பதிக்கும் விதி
தனக்கும்அரி தனக்கும்நரர் தமக்கும்உறும் இடுக்கண்
வினைசாடும்
துதிக்கும்அடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கின்அவர் குலத்தைமுதல் அறக்களையும்—எனக்கோர்
துணையாகும்
தருக்கின்நமன் முடுக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை—
கழற்கு நிகராகும்
தனித்துவழி நடக்கும்என திடத்தும்ஒரு
வலத்தும்இரு புறத்தும்அரு கடுத்துஇரவு—பகல்
துணையதாகும்
திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன்எனது உளத்திலுறை கருத்தன்மயில்
நடத்து குகன்வேலே''

''வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை''

என நக்கீரர் போற்றுகின்றார்.

முருகனுடைய வேல் மிகவும் புகழுடையது. அதனை 'நெடுவேல்' எனப் போற்றுகின்றனர். அது பளபள வெனச் சுடர்விட்டுக் கொண்டிருக்கும்.

கடலில் ஒளிந்து நின்ற சூரனாகிய மாமரத்தைப் பிளந்தது முருகன் கைவேல்.

''பார்முதல் பனிக்கடல் கலங்கஉள் புக்குச்
சூர்முதல் தடிந்த சுடர்இலை நெடுவேல்''
(திருமுருகாற்றுப்படை)

''கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று
உய்வாய் மனமே''

என்று அருணகிரியார் அறிவுரை கூறுகின்றார். முருகன் திருவடிகளை அடைவதற்கு அவனுடைய கையிலிருக்கும் வேலை வணங்கவேண்டும் என்கின்றார்.

"தோகைமேல் உலவுங் கந்தன் சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும்வேலை வணங்குவது எமக்குவேலை"

எனப் பாரதியார் பாடுகின்றார்.

அனைத்துயிரையும் ஈன்ற பராசக்தியே முருகன் கைவேலாகக் காட்சி தருகிறாள். உலகைக் காக்கும் பொறுப்பினை ஏற்றிருப்பவன் கந்தன். இதில் வேலாக இருக்கும் அன்னையும் பங்கு பெறுகின்றாள்.

அறிவுக்கு அறிவாகி அவ்வறிவுக்கு எட்டாத நிலையி லிருக்கும் பரம்பொருள் குருவடிவாகி வந்து நமது அறிவுக் கண்ணைத் திறந்து அருள் புரிகின்றது.

ஆடும் மயில் :

துன்பம் வரும்போது வேலும் மயிலும் வந்து நம்மைக் காப்பதால் 'வேலும் மயிலும் துணை' என்ற தொடர் வழங்கி வருகின்றது. வேல் முருகனுக்குப் படை யாக இருந்து வருவதுபோல் மயில் அவனுக்கு ஊர்தியாக இருந்து உதவி புரிகின்றது.

இந்திரன் முருகனுக்கு மயிலை ஊர்தியாகக் கொடுத் தான் எனப் பரிபாடலில் வருகின்றது.

"வளம்கெழு செல்வன் தன்மெய்யில் பிரித்துத்
திகழ்பொறிப் பீலி அணிமயில் கொடுத்தோன்."

சூரபதுமன் முருகப் பெருமானிடம் தோற்று மயில் வாகனமாக மாறுவதற்கு முன்பே இந்திரன் கொடுத்த மயில் முருகனுக்கு ஊர்தியாக இருந்தது. மயில்மீது அமர்ந்து சூரனுடன் போரிட்டார் என்பதனைக் குறிப் பிடும்போது,

'கோலமா மஞ்ஞைமீது குலவிய குமரன்'

எனக் கச்சியப்பர் கூறுகின்றார்.

மயில் பிரணவ வடிவமாக இருப்பதால் அது வணங்குதற்குரிய பொருளாகின்றது. மந்திர வடிவமாக இயங்குகின்றது.

"ஆதியொடும் அந்தம் ஆகிய நலங்கள்
ஆறுமுக மென்று தெளியேனே
ஆன தனி மந்த்ர ரூப நிலை கொண்ட
தாடுமயி லென்ப தறியேனே"

என அருணகிரியார் பாடுகின்றார். துன்பம் நேர்கையில் மயில் முருகப்பெருமானுடன் வந்து அருள் செய்கின்றது.

அருணகிரியாருடன் சம்பந்தாண்டான் வாதம் செய்த போது,

"மயிலுமாடி நீயாடி வரவேணும்"

என்று வேண்டிக் கொண்டார். உடனே முருகப் பெருமான் மயில்மீது இவர்ந்து பிரபுட தேவமன்னன் அவையில் தோன்றிக் காட்சியளித்தார். இதனை அருணகிரியார் திருப்புகழில் குறிப்பிட்டுள்ளார்.

"உலகினில் அனையவர் புகழ்வுற அருணையில்
ஒருநொடி தனில்வரும் மயில்வீரா"

"சயிலம் எறிந்த கைவேல்கொடு
மயிலினில் வந்தெனை ஆட்கொளல்
சகம்அறி யும்படி காட்டிய—குருநாதா."

பகையைத் தடுப்பதற்கு மயில் பெருந்துணையாகின்றது.

"மயிலும் அயிலும் கொண்டு வன்பகை தணிக்கலால்"

எனச் சிதம்பர சுவாமிகள் அருளிச் செய்தனர்.

எமன் வரும்போது நமக்கு அஞ்சாத நிலையை அளிப்பது மயிலாகும்.

''கார்மா மிசைகா லன்வரின் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார் பவலா ரிதலா ரியெனும்
சூர்மா மடியத் தொடுவே லவனே''

என அருணகிரியார் வேண்டுகின்றார். கரிய எருமையின் மேல் காலன் வரும்போது மயில்மீது எழுந்தருளி வந்து ஆட்கொள்ளுமாறு வேண்டுதல் புரிகின்றார். முருகனடியார்க்கு மரணமிலாப் பெருவாழ்வு கிடைக்கும். முருகனை வழிபடுகின்றவர்கள் மரணத்திற்கு அஞ்சுவதில்லை. சூரனை அடக்கிய முருகப் பெருமானே எமனை அடக்கி என்னை ஆட்கொள்வாயாக என வேண்டுகின்றார் அருணகிரியார்.

சிதம்பர சுவாமிகளும்,

''காலன் செங்கட் கடாவினில் ஏறியே
கயிறு வீசிப் பிடியா முனம்எனை
வேலும் செங்கையில் ஏந்தி மயில்மிசை
விரைவினில் வந்துஉவந்(து) அஞ்சலென்று அருள்வாய்'

எனப் பரவுகின்றார்.

மயிலின் மாண்பினை 'மயில் விருத்தம்' என்ற நூலில் அருணகிரியார் விரிவாகப் பாடியுள்ளார்:

''சேடன் முடிதிண்டாட ஆடல் புரிவெஞ்சூரர்
திடுக்கிட நடிக்கும் மயிலாம்''

''விழிபவுரி கவரிகண் டுளமகிழ விளையாடும்
வித்தார நிர்த்த மயிலாம்''

''வேலை சுவறச் சுரர் நடுக் கம்கொளச் சிறகை
வீசிப் பறக்கும் மயிலாம்'

''கீர்த்திமா அசுரர்கள் மடியக் கிரவுஞ்சகிரி
கிழிபட நடாவும் மயில்''

''கொடியநிசி சரர்உதரம் எரிபுகுத விபுதர்பதி
குடிபுகுத நடவு மயில்.''

இந்திய அரசினர் மயிலினை நமது நாட்டின் சிறந்த பறவையாகத் தேர்ந்தெடுத்துள்ளனர். இது மிகவும் போற்றத்தக்கது. தமிழ் அன்பர்களின் முயற்சியால் இந்தியநாட்டுத் தலைநகரில் உத்தரசுவாமி மலை என்னும் முருகன் கோவிலும் அமைக்கப்பட்டிருக்கின்றது. மயிலைப் பாடிப் பரவும் அன்பர்கள் கல்வியும் செல்வமும் பெற்று இன்பமுடன் வாழ்கின்றனர்.

# 7. கோழிக் கொடி

கோழி நாதவடிவமாக இருந்து கூவுகின்றது. சேவற்கொடி வெற்றியின் சின்னமாக மாட்சிமையுடன் விளங்குகின்றது.

"மூவிரு முகங்கள் போற்றி
முகம்பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற
ஈராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள்
மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி
திருக்கைவேல் போற்றி போற்றி"

எனக் கச்சியப்பர் போற்றுகின்றார். கோழி கூவினால் இருள் நீங்கி ஒளி தோன்றும். அறிவுச்சுடர் தோன்றினால் உள்ளத்தில் முருகன் தோன்றுவான். முருகப் பெருமான் சோதி வடிவமாக சேவற்கொடியுடன் காட்சி தருவான்.

"திருக்கை சேவற் கொடியோனே
சகத்தில் சோதிப் பெருமாளே"

இருளைப் போக்குவதற்கு ஞாயிற்றினைக் கூவி அழைப்பது சேவல். நமக்கு அருள் ஒளியைத் தருவது சேவல்.

"கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடிஎன
வாழிய பெரிதென்று"

நக்கீரர் வாழ்த்துகின்றார்.

"மலைமேவு மாயக் குறமாதின்
மனமேவு வாலக் குமரேசா
சிலைவேட சேவற் கொடியோனே
திருவாணி கூடற் பெருமாளே" (திருப்புகழ்)

"ஈரேழு லோகம் வாழ்வான சேவற் கொடியோனே
தேவதேவ தேவாதிதேவப் பெருமாளே."

முருகனுடைய சேவலையும் மயிலையும் வணங்கினால் மங்களமான வாழ்வைப் பெறலாம்.

"நினைவில்வந்து ஆடுவது முருகனேறும் மயிலாகும்
கனவில்வந்து ஆடுவது சேவலெனும் கொடியாகும்."

முருகப் பெருமானுடைய சேவலின் வலிமையைப் பற்றி அருணகிரியார் பின்வருமாறு பாடுகின்றார் :

"படைபட்ட வேலவன்பால் வந்த வாகைப் பதாகையென்னும்
தடைபட்ட சேவல் சிறகடிக்கொள்ளச் சலதி கிழிந்தது
உடைபட்டது அண்டகடாகம் உதிர்ந்தது உடுபடலம்
இடைப்பட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டவே"

(கந்தரலங்காரம்)

முருகன் கோவில்களுக்குச் சேவல் காவடி, மலர்க் காவடி, மச்சக் காவடி, பால் காவடி முதலிய காவடிகள் வரும். அடியார்கள் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் வருவார்கள். கோவிலுக்கு வந்து சேர்ந்ததும் சேவல் சிறகடித்துக்கொண்டு வெளியில் வரும். பால் காவடியில் பால் பொங்கி வழிந்துகொண்டே வரும்.

"பாலாலே முருகையா பாடிவரும் காவடிகள்
தேனாலே முருகையா தேடிவரும் காவடிகள்
சேவல் நல்ல காவடிகள் முருகையா
சேர்ந்து உனைத் தேடிவரும்
சர்க்கரைக் காவடிகள் முருகையா
சண்முகனை நாடி வரும்"

என்று பாடுவார்கள். "வேல் வேல், வெற்றி வேல்" என்று ஒலி எழுப்புவார்கள்.

"ஆறுமுக வேலவனே ஆதரிக்க வாவா
ஆடிவரும் காவடிகள் கண்டிடவும் வாவா
அரகரா திருச்செந்தூர் வேலவனே வாவா
ஆறுமுக தேசிகனே ஐயனே வாவா"

என்று அன்புடன் அழைப்பார்கள்.

# 8. ஆறுபடை வீடுகள்

முருகனுக்கு உகந்த திருப்பதிகள் ஆறு. எங்கும் நீக்கமற நிறைந்த இறைவனை திருக்கோயில்களில் வைத்துச் சிறப்பாகக் கொண்டாடுகின்றோம். கால்களைப் பெற்றவர்கள் திருக்கோயில்களுக்குச் சென்று வலம் வந்து வழிபடல் வேண்டும்.

> ''கால்களால் பயன்என் கறைக்கண்டன் உறைகோயில்
> கோலக் கோபுரம் கோகரணம் சூழாக்
> கால்களால் பயன்என்.''

என அப்பர் பெருமான் வினவுகின்றார். கோயில்களிலும் தனிச் சிறப்புடைய கோயில்கள் இருக்கின்றன. ஆறுமுகப் பெருமானுக்கு திருக்கோயில்கள் பலவாக அமைந்தாலும் அவனுக்குரிய உகந்த இடங்கள் ஆறு என்பதை ஆன்றோர்கள் அறிவித்துள்ளனர். இவற்றை ஆறுபடை வீடுகள் எனக் கூறுவர். சங்க நூலாகிய திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் ஆறுபடைவீடுகளைப் பாடியுள்ளார். அருணகிரிநாதரும் கச்சியப்பரும் ஆறு திருப்பதிகளைச் சிறப்பாகப் பாடியுள்ளனர்.

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி (பழநி), திருவேரகம் (சுவாமிமலை), குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்ற ஆறு திருப்பதிகளையும் முருகன் வீற்றிருக்கும் படைவீடுகள் எனக் கூறுவர்.

திருப்பரங்குன்றம் மதுரைக்குத் தென்மேற்கே 6.4 கி. மீ. தொலைவிலுள்ளது. இங்கேதான் நக்கீரர் 'திருமுருகாற்றுப்படை' பாடி, பூதத்தின் குகையிலிருந்து விடுதலை பெற்றார். தெய்வயானையைத் திருமணம் புரிந்த இடமும் இதுவேயாகும். இங்குள்ள கோயில் மலையில் குடைந்தெடுக்கப்பட்டது.

இங்குச் சிவபெருமான் முருகன் திருமணத்திற்காக உமாதேவியுடன் எழுந்தருளித் தேவர்களுக்குக் காட்சி தந் தருளினர். சுந்தரர் சேர சோழ பாண்டியர்களுடன் இங்கு வந்து வழிபாடுகள் செய்து,

"முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே"

என்று பாடியுள்ளார். மலைமீதுள்ள சுனையின் அருகில் சிவலிங்கமும் நந்தியும் இருக்கின்றன.

திருப்பரங்குன்றம் சங்க நூல்களில் பல இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது.

"சீர்மிகு முருகன் தண்பரங் குன்றத்து"

என அகநானூற்றிலும்,

"அங்குரல் தனிமழை பொழியும்
தண்பரங் குன்று"

எனவும்,

"மாகொன்ற வென்வேலோன் குன்று"

எனவும் மதுரைக் காஞ்சியிலும் வருகின்றது.

திருப்பரங்குன்றத்தில் சுனைகள் இருப்பதையும் பல வகையான மலர்கள் மலர்ந்திருத்தலையும்,

"கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்"

எனத் திருமுருகாற்றுப் படை கூறுகின்றது.

குமரனைப் போற்றும் பாடல்கள் தமிழ்க்கடலுள் எண்ணிறந்தன. 'பரிபாடல்' மிகவும் பழைமையானது. முருகன் கோயில் கொண்டிருப்பதனல் திருப்பரங்குன்றத் தின் புகழும் வளமும் பொலிந்து தோன்றுகின்றன வென வும் முருகப் பெருமான் அன்பும் அருளும் அறனும் தரு வான் எனவும் கூறுகின்றது. அன்பும் அருளும் வேண்டி

ளவெயினனுர் என்னும் சான்ருேர் பரங்குன்றப் பெருமானிடம் செல்கின்ருர்.

"நோயுடை நுடங்குசூர் மாமுதல் தடிந்து
வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய
கொன்றுணல் அஞ்சாக் கொடுவினை கொல்தகை
மாய அவுணர் மருங்கறத் தடிந்தவேல்"

எனப் போற்றுகின்ருர்.

"ஞாயிற்றேர் நிரத்தகை நளினத்துப் பிறவியை"

எனப் பாடுகின்ருர்.

"யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே"

என வேண்டுகின்ருர்.

பெருமானின் திருவடியைச் சேர்ந்துவிட்டால் பிறவித் துன்பம் நீங்கும். அருள்தரும் வள்ளலாகிய முருகப் பெருமானே நம்மைத் தாங்கிக் காப்பான்.

நல்லந்துவனுர் முருகப்பெருமான்மீது அளவற்ற அன்பு கொண்டவர். திருப்பரங்குன்றத்திற்கு நாள் தோறும் சென்று பரவிப் பாடுவார். அங்கிருக்கும் அருவி மாலைபோல் இருபுறமும் வீழ்ந்து அழகு செய்கின்றது. அங்கு உள்ள சுனை புலவருக்குச் சரவணப் பொய்கையை நினைவூட்டுகின்றது.

"ஒருநீலப் பொய்கையோ டொக்கும்நின் குன்றின்
அருவிதாம் மாலைச் சுனை"

என்று பாடுகின்ருர். வானம் வறண்டாலும் நின்குன்றம் பசுமை குன்ருது எனப் போற்றுகின்ருர்.

தமிழ்ப் புலமை மிக்க கேசவனுர்,

''வள்ளி யம்மையாம் நறுமலரினை
நயந்த பெருமானே''

எனப் பாடுகின்றார்.

''கார்மலிந் தன்றுநின் குன்றுபோர் மலிந்து
சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே''

என வாழ்த்துகின்றார்.

பெருமானை வழிபடச் செல்லும் அடியார்கள் பலரும் எழுப்புகின்ற இன்னிசை போன்றே, இயற்கையும் பல்வேறு ஒலிகளுடன் பெருமானைப் போற்றும் சிறப்புடையது திருப்பரங்குன்றம் என அழிசியார் என்னும் புலவர் பாடுகின்றார்.

"நீலநிறமுடைய மயிலையும் உயர்ந்த பறவையாம் சேவற் கொடியினையும் உடையோனே! அழகாகவும் நெடிதாகவும் விளங்கும் நின் திருப்பரங்குன்றம் ஒன்றனையே யாம் பாடுவோம். நின் திருவடிகளையே நாளும் தொழுவோம்'' எனப் பாடுகின்றார்.

முருகப் பெருமான் கடப்ப மரத்தின் நிழலில் கோயில் கொண்டிருக்கும் அரிய காட்சியினை அழகுறப் பாடுகின்றார் ஆசிரியர் நப்பண்ணனார். பெருமானை வழிபடச் செல்வோர் குழலையும் யாழையும் இசைத்து முரசொலி எழுப்புவார்கள்.

''கைவைத்து இமிர்பு குழல்காண்கு வோரும்
யாழின் இளிகுரல் சமம்கொள் வோரும்
கூர நாண்குரல் கொம்மென ஒலிப்ப
ஊழுற முரசின் ஒலிசெய் வோரும்''

எனக் கூறப்பட்டிருக்கின்றது.

''பூங்கொடி போன்ற வள்ளிநாயகியை மணந்த முருகோனே, நாங்கள் உன்னை வாழ்த்துகின்றோம். நீ

இளஞாயிற்றினைப்போல் இருக்கின்றாய். திருப்பரங்குன்றத்தில் அமர்ந்து நீ அருள் புரியும் நிலையைக் கண்டோம். எமக்கு அருள் புரிவாயாக'' எனப் புலவர்கள் வேண்டுகின்றனர்.

ஆசிரியர் நல்லச்சுதனார், 'முருகா நின் திருவடி நீழலில் இன்புற்றிருக்கும் இந்த இன்பம் என்றும் அமைவதாக' என வேண்டுகின்றார்.

உயர்ந்தோர் புகழ்ந்து போற்றும் சிறப்பினை யுடையது பரங்குன்றம்.

எம்பெருமானே, நீ விரும்பும் பரங்குன்றினிடத்தே வந்து நின்னைத் தொழுது போற்றுவோம். உன் திருவடிகளில் உறைகின்ற வாழ்வு அருள்வாயாக என வேண்டுகின்றார் :

''ஆறிரு தோளவை அறுமுகம் விரித்தவை
நன்றமர் ஆயமொடு ஒருங்குநின் அடியுறை
இன்றுபோல் இயைகெனப் பரவுதும்
ஒன்றார்த் தேய்த்த செல்வநின் தொழுதே''

இவ்வாறு பாடிய புலவர்கள் முருகப் பெருமானின் கருணையை நயந்து வேண்டுகின்றனர். திருப்பரங்குன்றத்தின் புகழைப் போற்றி அவன் அருளை வேண்டி நிற்கின்றனர். முருக இன்பத்தைத் தமிழ் இலக்கிய விருந்தாக அளிக்கின்றனர்.

இப் புலவர்கள் முருகப் பெருமான்மீது அன்பு கனிந்த பாடல்களைப் பாடியுள்ளனர். இந் நூல் சங்க நூல் வரிசையில் எட்டுத்தொகை நூல்களில் ''ஓங்கு பரிபாடல்'' எனச் சிறப்பிக்கப்பட் டுள்ளது. முருகப் பெருமான் தெய்வ யானையை மணந்துகொண்ட போது அம் மணக்கோலத்தைக் காணத் தேவர்களும் முனிவர்களும் ஒன்றுகூடி இருந்தனர். அப்பொழுது திருப்பரங்குன்றம் இமயம்போல விளங்கிற்று. அங்குள்ள சுனை சரவணப்

பொய்கைபோ லிருந்தது எனக் கூறுகின்றார் நல்லந்துவனார்.

முருகக்கடவுள் நிறம் சூரியனைப் போன்ற ஒளியுடையது என்பதனை "ஞாயிற்றேர் நிறத்தகை" என இளவெயினனார் பாடுகின்றார்.

முருகன் திருவருள் பெறுவதற்குச் சினம் நீங்க வேண்டுமென்றும் அறத்தொடு நிற்றல் வேண்டுமென்றும், நல்லொழுக்கமும் தவமும் வேண்டுமென்றும் இளநாகனார் கூறுகின்றார்.

கேசவனார் ஆறுமாமுகனை வழிபடுதலையே விரும்பி வரமாகக் கேட்கின்றார். இவ்வாறெல்லாம் சங்ககாலப் புலவர்கள் முருகனை வாழ்த்தியும் வணங்கியும் உள்ளனர்.

**திருச்செந்தூர் :**

இது கடற்கரையில் இருப்பதால் 'அலைவாய்' என்ற பெயர் பெற்றுள்ளது. கடல் சார்ந்த இடம் என்பதனைக் கச்சியப்பர்,

"பருமணி வயிரமுத்தம் பலவளம் பிறவும் ஆழித்
திரைஎறி அலைவாய் ஆகும் செந்திமா நகரம்"

எனச் சிறப்பித்துள்ளார்.

குமரகுருபரர்,

"தெள்ளுதிரை கொழிக்கும் செந்தூர்"

என்றார். இவ்வூர் திருநெல்வேலியிலிருந்து கிழக்கில் 48 கி. மீ. தொலைவில் உள்ளது.

'கயிலை மலையனைய செந்தில்' என்றும், 'புனிதம் தங்கும் செந்தில்' என்றும் அருணகிரியார் பாடுகின்றார்.

அபர்பெருமான்,

"நம்செந்தில்மேய வள்ளிமணாளர்க்குத் தாதை"

என்று இறைவனைக் குறிப்பிடுகின்றார்.

"உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்"

என்பர் நக்கீரர்.

"திருமணி விளக்கின் அலைவாய்"

என அகநானூறு போற்றுகின்றது.

"சீர்கெழு செந்தில்"

எனச் சிறப்பிக்கின்றது சிலப்பதிகாரம்.

"வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாது நெருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே"

என அருணகிரியார் பாடுகின்றார்.

அறிஞர் நிறைந்த பதி என்பதனை,

"செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி
செந்தில் பதிநகர் உறைவோனே."

என்ற பாட்டினால் அறியலாம்.

மனிதருக்கு இன்றியமையாத தேவைகள் மூன்று. இவ்வுலகில் நல்வாழ்வு தரும் இம்மையும் மேலுலகில் இன்ப வாழ்வு தரும் மறுமையும் அதற்குமேல் முத்திப் பேறு எனப்படும் வீடும் வேண்டும். இந்த மூன்று நலங்களையும் தருபவன் செந்தில் முருகன். வள்ளியம்மை இக வாழ்வையும், தெய்வயானை பரவாழ்வையும், முருகப் பெருமான் வீடுபேற்றினையும் வழங்குகின்றனர்.

படைகளும் படைத்தலைவனும் தங்கும் இடம் 'படை வீடு' எனப்படும். வினைகளிலிருந்து விடுபடுவதை 'வீடு' என்கிறோம். வெற்றிவேல் வீரனாகிய முருகப்பெருமான்

தங்கி இருக்கும் இடம் 'படைவீடு' எனப் பெயர் பெற்று இலங்குகிறது.

"ஆறுதிருப் பதிகண்டு ஆறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தை குடிகொண்டோன்"

எனக் கந்தர் கலிவெண்பா கூறுகின்றது.

ஆறுபடைவீடுகளுக்கும் சென்று வணங்கி 'ஓம் சரவணபவா' என்று ஓதவேண்டும்.

திருச்செந்தூரில் கடலில் முழுகிக் கோவிலுக்குச் செல்வார்கள். மதிற்சுவரில் அலைகள் வந்து மோதிக் கொண்டிருக்கும். கடற்கரையின் ஓரத்திலேயே நாழிக் கிணறு ஒன்று இருக்கின்றது. அது முருகன் அருளால் புனிதநீர் அளிக்கின்றது. கடல்நீரைப் போல் உவர்ப்பு இல்லாமல் நல்ல நீராக எடுக்க எடுக்கக் குறையாமல் வருகின்றது. கடற்கரையில் அமர்ந்து முருகப் பெருமானைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். வீட்டிற்குப் போக மனம் வராது.

திருவாவினன்குடி (பழநிமலை) :

பழநிமலையின் அடிவாரத்தில் இருப்பது திருவாவினன்குடி. இதற்குச் சித்தன் வாழ்வு என்ற பெயரும் உண்டு. மலையின் மேல் பழநி ஆண்டவர் கோவிலில் போகர் சமாதி இருக்கின்றது. போகமுனிவர் சிறந்த சித்தர் ஆதலின் அவர் வாழும் இடத்திற்குச் சித்தன் வாழ்வு என்ற பெயர் வந்தது.

"திருவாவி னன்குடி வரும்
அமலனைப் போற்றுவோம்"

எனக் கச்சியப்பர் போற்றுகின்றார்.

"அமரர்க் கிறையே வணங்கிய
பழநித் திருவாவி னன்குடி
அதனில் குடியா யிருந்தருள்—பெருமாளே"

என அருணகிரியார் பாடுகின்றார்.

"படிக்கின்றிலை பழநித் திருநாமம்"

"அதிசயம் அநேக முற்ற பழநிமலை"

"பதிநா லுலகோர் புகழ்ப் பழநி"

"காசியில் மீறிய பழநி"

எனப் புகழ்ந்து பாடுகின்றார்.

பழநி ஆண்டவருக்குப் ஐந்தமுத முழுக்கு (பஞ்சாமிர்த அபிடேகம்) மிகவும் சிறப்பாகச் செய்யப் படுகின்றது. ஆண்டவரின் திரு உருவம் ஒன்பான் மருந்து (நவாபாஷாணம்) என்னும் மருந்தால் ஆகியது எனக் கூறுவர். மலை ஏறி இறைவனைக் கண்டு வணங்க நல்ல படிகள் இருக்கின்றன. வழியில் இடும்பன் கோவில் இருக்கின்றது. இம் மலையினைக் கொண்டு வந்தவன் இடும்பன் என்பது புராணக் கதை. 'விஞ்சு' என்னும் இரயில் வண்டியில் ஏறி மலைக்கோவிலுக்குப் போகலாம். மலையைச் சுற்றி வரவும் பாதைகள் அமைக்கப்பட்டுள்ளன. மலையைச் சுற்றி வரும்போது வண்டுகள் ஒலிப்பதையும் மலர்கள் உதிர்ந்து அழகிய காட்சி அளிப்பதையும் அருணகிரியார் பாடுகின்றார்.

"பரிமள கற்காடவி
அரியளி சுற்றுப் பூவுதிர்—பழநிமலை"

பழநியாண்டவர் கோவிலுக்கு ஏராளமான அடியார்கள் வருகின்றனர். ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டு காவடியும் காணிக்கையும் செலுத்துகின்றனர். அன்புமேலீட்டினால் படிகளில் ஏறி இறைவனைக் காண ஓடுகின்றனர். திருமுழுக்குச் செய்வதும் அழகுபடுத்துவதும் மாறிமாறி நடந்துகொண்டே இருக்கும். பார்க்கும் போது உடல் சிலிர்க்கும். இக் கோவிலில் வெள்ளித் தேர், தங்கத்தேர் ஓடும்போது தேவர் உலகம்போல் காட்சி அளிக்கும்.

இடும்பன் அசுரர்களுக்கு வில்லாசிரியனாக இருந்தவன். சூரபதுமன் அழிந்தபிறகு ஒரு வனத்தில் தவம்

செய்துகொண்டிருந்தான். சிவபெருமான் அவன் முன் தோன்றி என்ன வரம் வேண்டுமென்று கேட்டார். "குமரக் கடவுளுக்கு அடியவனாக வாழவேண்டும்" என்றான். அவ்வாறே இறைவன் அருளிச் செய்தார். அகத்திய முனிவர், சிவகிரி, சக்திகிரி என்ற இருமலைகளைச் சிவசக்திகளாக எண்ணி வழிபாடுகள் செய்து வந்தார். அந்த மலைகளைப் பொதிகைக்குக் கொண்டுபோக விரும்பினார். இடும்பன் இருமலைகளையும் காவடியாகக் கட்டித் தோளில் சுமந்து வந்தான். சுமை அதிகமாக இருந்ததால் திருவாவினன் குடியில் இறக்கிவைத்தான். சிறிது நேரம் இளைப்பாறி மலைகளை மீண்டும் தூக்க முயன்றான். அவனால் தூக்க முடியவில்லை. முருகப் பெருமான் குழந்தை வடிவில் தோன்றினார். "இம் மலைகள் இங்கேயே இருக்கட்டும். நாம் இங்கு எழுந்தருளி இருப்போம். நீயும் இம் மலையின் அடிவாரத்தில் இருந்து காவல் புரிக" எனக் கட்டளையிட்டார்.

எம்பெருமான் கூறியபடி இடும்பன் சிவகிரி மலையின் அடிப் பகுதியில் தங்கினான். அன்பர்கள் இடும்பனைப் போல் பழநி ஆண்டவருக்குக் காவடிகள் கொண்டுவந்து வழிபடுகின்றனர். மலர்க் காவடி, பாற்காவடி, சர்க்கரைக் காவடி, பன்னீர்க் காவடி முதலிய காவடிகளைக் கொண்டு வந்து இடும்பனை வழிபட்டுப் பிறகு பழநி ஆண்டவரை வழிபடுகின்றனர்.

பழநி ஆண்டவர் ஆண்டிப் பண்டாரமாகத் தவக் கோலத்துடன் காட்சியளிக்கின்றார். இதற்கும் ஒரு கதை வழங்கி வருகின்றது:

நாரதர் சிவபெருமானிடம் ஒரு மாதுளங்கனியைக் கொடுத்தார். பிள்ளையாரும் முருகனும் வந்து அக் கனியைக் கேட்டனர். "உலகங்களையெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் வலம் வருபவனுக்கு இக் கனி தரப்படும்" என்றார் சிவபெருமான்.

உடனே முருகன் மயில்மீது ஏறிச் சென்றார். பிள்ளையார் உலகங்கள் எல்லாம் சிவபெருமானிடம் அடங்கி இருப்பதால் தந்தையை ஒரு முறை வலம் வந்து கனியைக் கேட்டார். சிவபெருமானும் பிள்ளையாரிடம் கனியைக் கொடுத்துவிட்டார். முருகப்பெருமான் உலகங்களை யெல்லாம் வலம் வந்து கயிலை மலையை அடைந்தார். பழம் பிள்ளையார் கையில் இருந்தது. உடனே முருகன் ஆடை அணிகலன்களைத் துறந்து ஆண்டிக்கோலத்துடன் சிவகிரி யடைந்தார். உமாதேவியார் சிவபெருமானுடன் அங்கு வந்து முருகனைத் தேற்றினர்: "நீயே ஞானபண்டிதன்; பழம்வேறு நீவேறு அன்று. ஞானப்பழமாகிய உன்னையே அண்ணனிடம் கொடுத்தோம்; பழம் நீ" எனக் கூறினர். "பழம் நீ" என்றதால் இம் மலைக்குப் பழநிமலை என்ற பெயர் வந்தது எனப் புராணம் கூறுகின்றது.

இதன் உட்பொருள் பிள்ளையார் சிவத்துக்குள் எல்லாவற்றையும் பார்த்தார் என்றும் முருகப்பெருமான் எல்லாப் பொருள்களிலும் சிவத்தைக் கண்டார் என்றும் தெரிந்து கொள்ளலாம். சிவம் என்ற ஒன்றில் எல்லா வற்றையும் காண்பதும், எல்லாவற்றிலும் சிவத்தைக் காண்பதும் இரண்டும் ஒன்றுதான். இவ்வரிய பெரிய நுட்பம் இக் கதையில் அடங்கி இருக்கின்றது.

"ஆகமம் விளைத்தகில லோகமும் நொடிப்பளவில்
ஆசையொடு சுற்றும் அதிவேகக் காரனும்"

எனவும்,

"தந்தை வலத்தால் அருள்கைக் கனியோனே"

எனவும் அருணகிரியார் பாடுகின்றார்.

இறைவன் அணுவுக்குள் அணுவாக எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றான். அணுவுக்குள் அணுவாகவும் பெரிய பொருளுக்கும் பெரிய பொருளாகவும் இருக்கின்றான் என்பதனை இக் கதை விளக்குகின்றது.

பழநியில் பல அற்புதங்கள் நிகழ்ந்துள்ளன. ஓர் அன்பர் சேலத்திலிருந்து காவடி எடுத்துக்கொண்டு பழநிக்குச் சென்றார். உறவினர்களை யெல்லாம் தம்முடன் அழைத்துச் சென்றார். அவருடன் வந்த பெரியவர் ஒருவர் நூறு பொன்னைப் வலைப் பையில் போட்டு இடுப்பில் கட்டி இருந்தார். குளிக்கும்போது பொன்னுள்ள பையைக் கரையில் வைத்துவிட்டு ஆற்றில் இறங்கினார். குளித்துவிட்டுத் திரும்பியபோது அது மறைந்துவிட்டது. 'முருகப்பெருமானே உன்னைக் காண வரும்போது நொடியிலே ஆகிவிட்டதே' என்று வருந்தினார். மறு நொடியிலே இரு காவலர்கள் கள்வனைக் கொண்டுவந்து அவர் முன் நிறுத்தினார்கள். களவுபோன பொருள் கிடைத்துவிட்டது. பெரியவர் திருடனை மன்னித்துவிட்டார். முருகனுக்குத் தமது நன்றியைத் தெரிவித்து வழிபாடுகள் செய்தார். கொண்டு வந்த பொருளெல்லாம் ஏழைகளுக்கு வாரி வழங்கினார். பழநி ஆண்டவரைக் குலதெய்வமாக வைத்துக் கொண்டாடினார்.

கள் விற்கும் கடையில் ஓர் அழகான மயிலைப் பிடித்துக் கறி சமைக்க வைத்திருந்தார்கள். பெரியவர் அந்த மயிலை விலைக்கு வாங்கி முருகன் கோவிலுக்குக் கொடுத்துவிட்டார். அது பல ஆண்டுகள் வரை கோவிலிலேயே தங்கி இருந்தது. சேவலையும் மயிலையும் போற்றி வளர்த்தால் பழநி ஆண்டவரின் அருளைப் பெறலாம்.

''பழநியி லேஇருக்கும் கந்தப்பழம்
பார்வையி லேகொடுக்கும் அன்புப்பழம்
பழமுதிர் சோலையிலே முதிர்ந்தபழம்—பக்திப்
பசியோடு வருவோர்க்கு ஞானப்பழம்
சிறப்புட னேகந்த கோட்டமுண்டு
சிங்கார மயிலாடத் தோட்டமுண்டு
உனக்காக மனக்கோயில் கொஞ்சமில்லை—அங்கு
உருவாகும் அன்புக்கோ பஞ்சமில்லை''

"காவடிகள் ஆடிவரும் ஆட்டத்திலே முருகா
கண்டுஎந்தன் மெய்ம்மறந்தேன் கூட்டத்திலே
சேவடியைக் காணவென்றே ஓடிவருவார் அவர்
சிந்தையிலே உன்றனையே பாடிவருவார்
ஏருத மலையினிலே ஏறிவருவார்
ஏறுமயில் வாகனனைக் காண வருவார்"

திருவேரகம் (சுவாமிமலை) :

கும்பகோணத்திற்கு மேற்கே 6.4 கி. மீ. தொலைவி லிருக்கின்றது.

"ஏரக வெற்பெனும் அற்புதம்மிக்க
சுவாமி மலைப்பதி மெச்சிய சித்த
இராச லட்சண லட்சுமி பெற்றருள் பெருமாளே"

என்றும்,

"குடகா விரிக்கு வடபாலார்
திருவே ரகத்தில் உறைவோனே"

என்றும்,

"காவேரி வடகரை சாமி மலையுறை தம்பிரானே"

என்றும் பாடப்பட்டிருக்கின்றது.

முருகப்பெருமான் தந்தைக்குப் பிரணவ மந்திரத்தின் பொருளைக் கூறித் தகப்பன்சாமி என்ற பெயரைப் பெற்றார். இப் புராணக் கதையின்படி இம் மலைக்குச் சாமிமலை என்ற பெயர் வந்தது.

"சூத மிகவளர் சோலைமருவுசு
வாமி மலைதனில் உறைவோனே." (திருப்புகழ்)

திருமுருகாற்றுப்படையிலும் சிலப்பதிகாரத்திலும் திரு வேரகம் எனக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

"சீர்கெழு செந்திலும் செங்கோடும்
வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன்"

என்பது சிலப்பதிகாரம்.

சுவாமி மலையில் கீழே சிவன் கோவில் இருக்கின்றது. படி ஏறி மேலே சென்றால் முருகப்பெருமானைக் காணலாம். சிவபெருமானுக்குப் பிரணவத்தின் பொருளைக் கூறிய கதையை இங்கே நடக்கும் திருவிழாவில் விளக்கிக் காட்டுவார்கள். பிரணவத்தின் வடிவமாகவே இருப்பவர் முருகப் பெருமான் என்பதைக் காட்டுவதற்காகப் பலவகையான கதைகள் தோன்றியுள்ளன.

"காவேரி நேர்வடக்கி லேவாவி பூமணத்த
காவார் சுவாமிவெற்பின் முருகோனே
கார்போலு மேனிபெற்ற மாகாளி வாலை சத்தி
காமாரி வாமிபெற்ற பெருமாளே." (திருப்புகழ்)

முருகன் இளமையில் பல திருவிளையாடல்களைப் புரிந்தார் எனப் புராணம் கூறுகின்றது. ஆறுமுகங்களுடன் காட்சி தருவார். ஒரு முகத்துடன் குமரராகவும் வருவார்; இசைக் கருவிகளை இசைப்பார்; கூத்தாடுவார். குழந்தையைப்போல் காணப்பட்டாலும் சிறந்த வல்லமையுடன் விளங்கினார். சிவபெருமானுடைய பேராற்றலே முருகனாகத் தோன்றியதைத் தேவர்கள் முதலில் உணர்ந்து கொள்ளாமல் அல்லலுற்றனர். பின்னர்த் தெளிவு பெற்று முருகனிடம் சரணடைந்தனர். முருகப் பெருமான் நாரதரின் வேள்வியில் எழுந்த பெரிய ஆட்டுக் கிடாவை அடக்கி அதனையும் தமது ஊர்தியாகக் கொண்டார்.

**குன்றுதோருடல் :**

குன்று தோருடல் என்பது தனிப்பட்ட கோயிலன்று. குமரன் மலைக் கடவுளாகவும் குறிஞ்சிக் கடவு

ளாகவும் இருத்தலால் அவன் குன்றுதோறும் ஆடும் குமர னுயினுன். முருகன் மலைக்கு உரியன் என்பதனை அருணகிரியார்,

'பலகுன்றி லும்அமர்ந்த பெருமாளே'

என்றும்,

'பலமலை யுடைய பெருமாளே'

என்றும் பாடியருளினுர்.

திருமுருகாற்றுப் படையில்,

''குன்றுதோ ருடலும் நின்றதன் பண்பே''

என வருகின்றது. மலைகள்தோறும் சென்று திருவிளை யாடல் புரிவது அவருடைய குணமாகின்றது.

முருகனுக்குரிய மலைகளில் திருப்பதி மலையும் குறிப் பிடப்பட் டிருக்கின்றது.

''மலர்கமல வடிவுள செங்கை
அயிற்குமர குகைவழி வந்த
மலைச்சிகர வடமலைநின்ற பெருமாளே''

எனவும்,

''வேந்த குமார குக சேந்தம யூரதட
வேங்கட மாமலை யில்உறைவோனே''

எனவும்,

''சிலைவாங்கிய நாரண னுர்மரு
மகனும்குக னேபொழில் சூழ்தரு
திருவேங்கட மாமலை மேவிய பெருமாளே''

எனவும் அருணகிரியார் பாடுகின்றுர்.

வடநாட்டினர் திருவேங்கடப் பெருமானைப் ''பாலாஜி'' என்று அழைக்கின்றனர். இச் சொல் பாலசுப்பிரமணியம்

அல்லது இளமுருகன் என்னும் பொருள் தருகின்றது. அங்கு வில்வத் தழைகளால் அருச்சனை நடைபெறு கின்றது. மூலவரிடம் முருகப் பெருமானுக்குரிய சின் னங்கள் காணப்படுகின்றன. இது முருகன் கோயிலாக இருக்கலாம் எனப் பலர் கருதுகின்றனர். முருகன் திருமால் மருகன் என்பார்கள். இருவரையும் சேர்த்து இம் மலையில் வணங்கலாம். மலைமேல் உந்து வண்டிகள் செல்கின்றன. மேலே தங்குவதற்கு வசதியாக அழகிய வீடுகள் கட்டப்பட்டுள்ளன.

சிறப்பாக ஆறுபடை வீடுகள் தவிரத் தமிழ்நாட்டில் ஒவ்வொரு குன்றின் மேலும் முருகன் கோவிலைக் காண லாம். இக் காலத்தில் முருகன் பாடல்கள் எளிய நடையில் நாடகத் தமிழில் ஏராளமாக வந்துள்ளன :

''இசையாய்த் தமிழாய் இருப்பவனே
இன்னிசையாய் எங்கும் இருப்பவனே '

''நெஞ்சம் உருகாதா கொஞ்சு தமிழ்வேலா
சந்தனம் குங்குமம் சிந்து வயலூரா''

''திருப்புகழைப் பாடப்பாட வாய்மணக்கும்
எதிர்ப்புகளை முருகா உன் வேல்தடுக்கும்
நீகொடுத்த தமிழ்அல்லவா புகழ்எடுத்தது-அந்த
தமிழ்கொடுத்த அறிவல்லவா தலைசிறந்தது''

''திருமுருகா என்று ஒருதரம் சொன்னல்
உருகுது நெஞ்சம் பெருகுது கண்ணீர்''

''அழகன் முருகனிடம் ஆசை வைத்தேன்
ஆலயத்தில் அன்புமலர் பூசை வைத்தேன்''

**பழமுதிர்சோலை (அழகர் மலை) :**

மதுரைக்கு வடக்கே 19·2 கி. மீ. தொலைவில் அழகர் கோவில் இருக்கின்றது. இதனை முருகன் படைவீடு என்க் கூறுகின்றனர். பழமுதிர்சோலை பல பொருள்களை அடித்துவரும் வளமான அருவியினையுடையது.

"சேண் நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே"

என நக்கீரர் கூறுகின்றார். மலையினின்றும் இழும் என்ற ஓசையுடன் குதிக்கும் அருவியையும் பழம் முற்றின சோலைகளையும் உடையமலை எனக் காட்டப்படுகின்றது.

இந்த மலையும் திருப்பதியைப் போன்று திருமாலுக்கும் முருகனுக்கும் சொந்தமாக இருக்கின்றது. இங்குள்ள திருமாலுக்கும் வில்வ அருச்சனை நடைபெறுகின்றது. கோவிலின் வலப்பக்கமுள்ள ஒரு சிலையின்மேல் திருநீறு பூசுகின்றனர்.

"திருமலி வான பழமுதிர் சோலை"

என்றும்,

"சோதியின் மிகுந்த செம்பொன்
மாளிகை விளங்கு சோலைமலை
வந்துகந்த பெருமாளே"

என்றும் அருணகிரியார் பாடுகின்றார்.

முருகனுக்குரிய பதிகள் எங்கும் நிறைந்திருந்தாலும் ஆறுபடை வீடுகளுக்கும் நேரில் சென்று வணங்கி அவன் அழகைக் காணலாம். அங்ஙனம் சென்று வணங்கினால் முருகப் பெருமான் நமது உள்ளத்தில் குடிகொண்டு திருவருள் புரிவான்.

"ஆறு திருப்பதிகண் டாறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே"

எனக் குமரகுருபரர் பாடுகின்றார்.

முருகன் ஆறுபடை வீடுகளிலும் காட்சிதந்து அருள் புரிவான். குன்றுதோறும் ஆடிவந்து குறைதீர்ப்பான். நமது பேரின்ப வாழ்வுக்கு வழிகாட்டும் நக்கீரர் திரு

முருகாற்றுப் படையில் பழமுதிர் சோலையின் சிறப்பைக் கூறுகின்றார். அங்கு அன்பர்கள் ஆடியும் பாடியும் முருகனைப் போற்றுகின்றனர். சாமி ஆடுகின்றவர்கள் நோன்பிருந்து ஆடுவார்கள். குறிஞ்சி நிலத்தில் ஊர்கள் தோறும் விழாக்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும். அன்பர்கள் மனமுருகிப் பாடுவார்கள். விழாக்கள் நிகழும் இடங்களில் எல்லாம் முருகப்பெருமான் சென்று அடியவர்களுக்கு அருள் புரிவான். அங்கெல்லாம் பெருமானுடைய கோழிக் கொடி வெற்றியுடன் விளங்கிக் கொண்டிருக்கும்.

''ஆடுகளம் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட
ஆண்டாண்டு உறைதலும் அறிந்த வாறே''

எனப் பாடுகின்றார். (பிணிமுகம் - யானை)

# 9. தெய்வயானை திருமணம்

தேவர்கள் தலைவன் தேவேந்திரன் சூரனது கொடுமையால் மிகவும் துன்புற்றான். முருகப்பெருமான் அவன் துன்பத்தைத் தீர்த்து வைத்தார். தேவர்களைச் சிறை மீட்டு இந்திர பதவியை வாங்கிக் கொடுத்தார். இந்திரன் தனது நன்றியைத் தெரிவிப்பதற்காகத் தான் வளர்த்த தெய்வயானையை முருகனுக்குத் திருமணம் செய்து வைக்க எண்ணினான்.

''காய்ந்திடு தம்பகை கடந்து பொன்னகர்
வேந்தியல் முறையருள் வேற்கை வீரர்க்குக்
கூந்தலஞ் சிறுபுறக் குஞ்சரந் தனை
ஈந்திட மகபதி இதயத் தெண்ணினான்''.

தேவர்களிடம் தன் கருத்தைத் தெரிவித்தான். பிறகு திருப்பரங்குன்றம் சென்று பணிவுடன் வேண்டிக் கொண்டான். முருகனும் அவ் வேண்டுகோளுக்கு இணங்கினார்.

முருகப்பெருமான் நம்மை எல்லாம் ஆட்கொள்ள வேண்டி தெய்வயானையைத் திருமணம் செய்து கொண்டார். ஆண்டுதோறும் இறைவனுக்குத் திருமணம் நடத்தி நாம் இன்பமுடன் வாழ வழி வகுத்துக் கொள்கிறோம். அவனை வாழ்த்துவதும் வணங்குவதும் நம் பொருட்டே யாகும்.

''தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடி
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ''

எனத் திருவாசகம் ஓதுகின்றது.

முருகன் திருமணம் திருப்பரங்குன்றத்தில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்திற்குச் சிவபெருமானும் உமையம்மையாரும் விண்ணவர்களும் மண்ணவர்களும் வந்திருந்தனர். இந்திரன் தெய்வயானையின் திருக்கையைப் பற்றி முருகன் திருக்கைகளில் கொடுத்தான். முருகன் மங்கல நாணை அணிவித்தார். இன்னிசைகள் முழங்கின.

''மங்கல நாணை மணிக்களம் ஆர்த்து
நங்கை முடிக்கோர் நறுந்தொடை சூழ்ந்தான்''.

திருமணம் முடிந்ததும் முருகப்பெருமான் தெய்வயானையுடன் பெற்றோர்களை வணங்கினார். தந்தையும் தாயும் ஆர்வமுடன் எடுத்தணைத்து அருள் புரிந்தனர்.

முருகன் தெய்வயானையுடன் கூடியிருந்ததை,

''உயிர்த்தொகை உய்ந்திட முயங்கி வைகினான்''

எனக் கச்சியப்பர் கூறுகின்றார்.

முருகப்பெருமான் உயிர்கள் இன்புறத் தேவகுஞ்சரியுடன் இணைந்திருக்கின்றார். இறைவனுடைய செயலாற்றல் தெய்வயானையாகக் காட்சியளிக்கின்றது. இதற்குப் பின் விழைவாற்றலும் வள்ளியாக வந்து சேர்கின்றது.

# 10. வள்ளி திருமணம்

திருமாலின் கண்மலரில் தோன்றிய சுந்தரவல்லி என்ற பெண்மணி முருகனையே மணம் செய்துகொள்ள வேண்டுமென்று வள்ளிமலையில் தவம் செய்து கொண்டிருந்தாள். வேடர்கள் வாழும் சிற்றூரில் நம்பிவேந்தன் பெண் மகவு வேண்டுமென்று முருகவேளை நாளும் வழிபட்டு வந்தான்.

ஒருநாள் நம்பிவேந்தன் வேட்டையாடச் சென்றான். சுந்தரவல்லி வள்ளிக்கிழங்கு அகழ்ந்தெடுக்கும் குழியில் அழகிய பெண் மகவாகக் காட்சியளித்தாள். வேட அரசன் குழந்தையைப் பார்த்துப் பெருமகிழ்வடைந்தான். வள்ளி என்று பெயர் சூட்டி வளர்த்து வந்தான்.

வள்ளியம்மைக்கு வயது வந்த பிறகு குல நெறிப்படி வள்ளிமலையில் தினைப்புனத்திற்குக் காவல் வைத்தான். வள்ளிக்கு அருள் புரியத் திருவுளம் கொண்ட முருகப் பெருமான் வேடவடிவுடன் தோன்றினார். நம்பி அரசன் அங்கு வரக் கண்டு வேங்கை மரமாக நின்றார். அரசன் போன பிறகு மீண்டும் குமரனாகி, வள்ளியுடன் உரையாடினார். நம்பி அரசன் திரும்பவும் வந்தபோது கிழவராக வேடம் கொண்டார்.

நம்பி அவரை வணங்கி வள்ளிக்குத் துணையாக வைத்தான். முருகன் பசியாக இருக்கிறதென்றார். வள்ளி தேனும் தினைமாவும் கொடுத்தாள். பிறகு நீர் வேண்டுமென்றார். வள்ளியுடன் விளையாடித் தம்மை மணந்து கொள்ளும்படி வேண்டினார். 'தவமுனிக்கு இது தகுமோ' என்று வள்ளி விலகிச் சென்றாள். முருகன் விநாயகரை வேண்டவும் அவர் யானையாக வந்தார். வள்ளி அச்சமடைந்து முருகப்பெருமானைத் தழுவிக்கொண்டாள்.

முருகப்பெருமான் தமது உண்மை வடிவத்தைக் காட்டி வள்ளியைத் தேற்றினர். தினை விளைந்ததும் கதிர்களை அறுத்துக்கொண்டு நம்பி வள்ளியைச் சிற்றூருக்கு அழைத்துச் சென்ருன். வள்ளி முருகனை நினைந்து உருகினுள். முருகன் வள்ளியைக் கவர்ந்து சென்று ஒரு சோலையில் தங்கினர். நம்பி அரசன் வேடர்களுடன் வந்து இறைவனென்று அறியாது போர் புரிந்தான். முருகனுடைய சேவல் கூவிற்று. அதன் நாதத்தின் சக்தியால் வேடர்கள் மாண்டனர். முருகன் கட்டளைப்படி வள்ளிநாயகி மாண்டவர்களை எழுப்பினுள்.

நம்பியும் அவனைச் சேர்ந்தவர்களும் உயிர்த்தெழுந்து முருகனைப் பணிந்தனர்.

அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி முருகன் சிற்றூருக்குச் சென்று வள்ளிநாயகியை மணம் செய்து கொண்டார். கந்தன் கருணையினல் வள்ளி அம்மையார்க்கு மானிட வடிவம் நீங்கித் தெய்வ வடிவம் வந்து எய்தியது. முருகப் பெருமான் வள்ளியுடன் தணிகைக்குச் சென்று சில நாட்கள் தங்கி இருந்தார். பிறகு வள்ளியுடன் கந்தகிரி சேர்ந்தார். தெய்வயானை தன் தங்கையைத் தழுவிப் பேரின்பம் அடைந்தாள். முருகன் வள்ளி தெய்வயானையுடன் உயிர்கட்கெல்லாம் இன்பநலம் அளித்துக் கந்தகிரியில் வீற்றிருந்தார்.

வள்ளியாகிய சீவன் சிவத்துடன் கலப்பதை வள்ளி திருமணம் என்கிருேம். பக்குவ ஆன்மாவை இறைவன் வலியவந்து ஆட்கொள்கின்ருன்.

நமக்கு இம்மை நலமும் பின்னர் மறுமை நலமும் அதற்குப் பின் முத்தி நலமும் வேண்டும். வீடு வாசல் துணிமணி, பொன் பொருள், மனைவி மக்கள் என்னும் இம்மை நலங்களை வழங்கும் தெய்வம் வள்ளிப்பிராட்டியார். வள்ளியை வழிபடுவோர்க்கு இக வாழ்வு சிறக்கும் வள்ளி நாயகி தோன்றிய இடம் வள்ளிமலை. இது காட்டுப்பாடி

வேலூருக்கு அருகில் இருக்கின்றது. வள்ளி தெய்வயானை வரலாறு கந்தபுராணத்தில் கூறப்பட்டுள்ளது.

திருமாலின் கண்களிலிருந்து தோன்றிய அமுதவல்லி, சுந்தரவல்லி என்னும் இரு நங்கையர் முருகவேளை மணம் செய்ய விருப்பிச் சரவணப் பொய்கையில் தவம் புரிந்தனர். முருகவேள் அமுதவல்லியை விண்ணுலகிலும் சுந்தர வல்லியை மண்ணுலகிலும் தோன்றித் தவம் புரியுமாறு பணித்தருளினார். அமுதவல்லி தானை ஒரு குழந்தையாகி இந்திரனுடைய ஐராவதம் என்னும் யானையிடம் வளர்ந்ததால் தெய்வயானை என்னும் பெயர் பெற்றாள்.

சுந்தரவல்லி வள்ளிமலையில் தோன்றி வேடர் தலைவனுகிய நம்பி அரசனிடம் வளர்ந்துவந்தாள். முருகப் பெருமான் வள்ளிப்பிராட்டியைத் தேடி வந்த இடம் வள்ளி மலையாகும். எம்பெருமானுடைய கால்பட்ட வள்ளி மலையைக் கண்டு தொழுதால் எல்லா நலன்களையும் பெறலாம்.

"சாடும் தனிவேல் முருகன் சரணம்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடும் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழும் கழலே" (கந்தரநுபூதி)

"வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவும்
வள்ளிமண வாளப் பெருமாளே" (திருப்புகழ்)

# 11. முருகன் திருவிழா

திருச்செந்தூரில் சட்டி விரதம் இருப்பவர்கள் ஆறு நாட்கள் கோவிலிலேயே இருப்பார்கள். சிலர் முழுப் பட்டினியாகவும் சிலர் அரைப் பட்டினியாகவும் இருப்பார்கள். சிலர் பாலும் பழமும் மட்டும் சாப்பிடுவார்கள். பாட்டும் பாராயணமும் நடந்துகொண்டிருக்கும். எங்கும் தோரணம், மா, வாழை, கமுகு, பனை, தென்னை, ஈச்சை முதலியவற்றைக் குலை குலையாகக் கட்டியிருப்பார்கள்.

முருகன் சூரனுடன் போர் செய்வதற்குக் கடற் கரைக்குச் செல்வார். ஆவணி, மாசி விழாக்களில் உருத்திர ராகக் காட்சியளிக்கும்போது சிவப்பு வண்ணம் பரி மளிக்கும். ஆடை அணிகளும் மலர்களும் சிவப்பு நிறமாக இருக்கும். மறுநாள் வெள்ளைப் பட்டாடைகளை அணிந்து வெண்மையான மலர்களுடன் தோன்றுவார். அன்று பிற் பகலில் பச்சை சாத்திவரும் காட்சி கண்கொள்ளாக் காட்சி யாக இருக்கும். பன்னீர் முழுக்கு நடந்துகொண்டே இருக்கும். தெருவெல்லாம் பன்னீர் வழிந்து ஓடும்.

கந்தர் சட்டியில் முருகன் போருக்குச் செல்லும் போது அடியார்கள் வேல் வேல், வெற்றிவேல் என்ற ஆரவாரத்துடன் செல்கின்றனர். வேல் விருத்தம் பாடிக் கொண்டு செல்கின்றனர். வாத்தியங்கள் முழங்குகின்றன. முருகனைப் பார்க்கப் பல ஊர்களிலிருந்து மக்கள் திரள் திரளாக வருகின்றனர்.

கடற்கரையில் மணல்மேடுதான் போர்க்களமா கின்றது சூரன் ஊரைச் சுற்றி வலம் வருகிறான். தலையை இப்படியும் அப்படியும் அசைத்துக்கொண்டு ஆணவமே உருவாக வருகின்றான். போரிடுவதற்குக் கடற்கரையைச் சேர்கிறான். அதிர்வெடியும் வாணவேடிக்கையும் போர்

முரசும் முழங்குகின்றன. அசுரன் முதலில் யானை முகத்தோடு வருகிறான். ஒரு வாணம் கயிற்றின் வழியாக முருகனிடமிருந்து அசுரனிடம் சீறிக் கொண்டு வருகின்றது. அடியார்களின் தலைவர் வேலைக் கொண்டு அவன் தலையைச் சாய்த்து விடுகிறார்.

அடுத்ததாகச் சூரன் தம்பி சிங்கமுகன் வருகிறான். அவன் தலையும் சாய்கின்றது. மூன்றாவதாகச் சூரபதுமன் வருகிறான். வேலினால் இருகூறு பட்டுச் சேவலும் மயிலுமாக மாறுகின்றான். இது மக்களுக்கு வேடிக்கை மட்டுமன்று, உள்ளத்தே இறை உணர்வைக் காட்டும் நிகழ்ச்சியாகவும் அமைகின்றது. ஆண்டவன் சக்திக்கு முன்னால் தீமை நிற்க முடியாது என்பதனை இக் காட்சி நினைவூட்டுகிறது. பிறகு முருகன் தெய்வயானையை மணந்து அம்மையாருடன் காட்சியளிக்கின்றார்.

விழாவுக்கு வந்த அடியார் ஒருவர் இராமலிங்க அடிகளின் திருவருட்பாப் பாடுகின்றார் :

''பன்னிருகண் மலர்மலர்ந்த கடலே ஞானப்
பரஞ்சுடரே ஆறுமுகம் படைத்த கோவே
என்னிருகண் மணியேஎன் தாயே என்னை
ஈன்றானே என்னரசே என்றன் வாழ்வே
மின்னிருவர் புடைவிளங்க மயில்மீ தேறி
விரும்பும்அடி யார்காண மேவும் தேவே
சென்னியில்நின் அடிமலர்வைத்து என்னை முன்னே
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே''

திருச்செந்தூர் ஆறுமுகப் பெருமானின் திருஉருவம் பதினேழாம் நூற்றாண்டில் டச்சுக்காரர்களால் கொள்ளையடிக்கப்பட்டது. கப்பலில் ஏற்றிப் புறப்பட்டதும் புயலும் இடியும், மழையும் வந்தன. கொள்ளைக்காரர்கள் அஞ்சி நடுங்கி முருகனை நடுக்கடலில் போட்டுவிட்டனர்.

ஆறுமுகன் வடமலையப்பபிள்ளை என்ற அடியாரின் கனவில் தோன்றித் தாம் கடலில் இருந்த இடத்தைக்

கூறினர். பிள்ளை அவர்கள் அடியார்களுடன் சென்று சிலையைத் தேடிக் கண்டுபிடித்துக் கோவிலுக்குக்கொண்டு வந்து சேர்த்தார். கி. பி. 1653இல் இது நடந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

முருகப் பெருமான் விழாவில் சிவப்புச் சாத்தி வரும் போது முன்புறம் முருகனாகவும் பின்புறம் ஆடலரசனாக வும் காட்சியளிக்கின்றான். உருத்திர வடிவமாக இருப் பதை உணர்த்துவதற்கு இருதெய்வங்களையும் ஒன்றாக இணைத்துக் காட்டுகின்றனர்.

திருச்செந்தூரில் ஆவணியிலும் மாசியிலும் பெருந் திருவிழாக்கள் நடைபெறும்.

பச்சை சாத்தி வரும்போது சண்முகர் பச்சை வண்ணனாகக் காட்சியளிக்கின்றார். பட்டு சாத்துவதும் அஃது உடனே பன்னீரால் நனைவதும், சொட்டச் சொட்ட நனைந்து கொண்டே எம்பெருமான் வருவதும் கண் கொள்ளாக் காட்சியாகும். அடியார்களுடைய உடலும் உள்ளமும் குளிர்கின்றன.

குழந்தைக் கடவுள் நம்முடன் வந்து விளையாடி நம்மை ஆட்கொள்ளுகிறான். திருப்போரூர் அடிகள்,

"ஏதுபிழை செய்தாலும் ஏழையே னுக்குஇரங்கி
தீது புரியாத தெய்வமே'

எனப் பாடுகின்றார்.

நான்மறைக்கும் எட்டாத தெய்வம்குழந்தை வடிவ மாக அடியார்களிடம் வருகின்றான்.

சூரனை அழித்த சட்டி நாளும், கார்த்திகைப் பெண் களுக்கு அருள்புரிந்த கிருத்திகை நாளும், முருகன் தோன்றிய விசாகநாளும் முருகன் அடியார்களுக்கு நோன்பு நாட்களாகச் சிறப்படைந்துள்ளன.

"சீர்கொண்ட தெய்வ வதனங்கள்
ஆறும் திகழ்கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களும்
தாமரைத் தாள்களும்ஓர்
கூர்கொண்ட வேலும் மயிலும் நற்
கோழிக் கொடியும் அருட்
கார்கொண்ட வண்மைத் தணிகா
சலமும் என் கண்ணுற்றதே." (திருவருட்பா)

பழநியில் திருவிழா:

பழநிமலையில் அடியார்களின் கூட்டம் எப்பொழுதும் நிறைந்திருக்கும். பழநி ஆண்டவரைக் காண வரிசை வரிசையாக மக்கள் காத்திருக்கின்றனர். காலை ஆறு மணி முதல் இரவு எட்டு மணி வரையில் திருமுழுக்கும் வழிபாடுகளும் நடந்துகொண்டே இருக்கும்.

ஒவ்வொரு மாதமும் கிருத்திகைக்குப் பெருங்கூட்டம் வரும். மார்ச்சு—ஏப்ரல் மாதங்களில் பங்குனி உத்திரம், ஜூன் மாதம் வைகாசி விசாகம், நவம்பரில் கந்தர் சட்டி, அடுத்தாற்போல் திருக்கார்த்திகை, சனவரியில் தைப்பூசம், தமிழ் ஆண்டுப் பிறப்பு முதலிய நாள்களில் சிறப்பாக விழாக்கள் நடைபெறும்.

பங்குனி உத்திரவிழா: பத்து நாட்கள் பெருவிழாவாகக் கொண்டாடப்படுகின்றது. சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசை அரங்குகளும் வைத்து நடத்துகின்றனர். பத்தாம் நாள் தேர்த்திருவிழா நடக்கும்.

கந்தர்சட்டி ஏழு நாட்கள் நடைபெறும். ஏழாம்நாள் கயமுகன், தாரகன், சிங்கமுகன், சூரபதுமன் இந் நான்கு அசுரர்களை இறைவன் அழிக்கும் காட்சியினை மலையைச் சுற்றிலுமுள்ள வீதியில் காணலாம்.

சிவன் பரமான்மாவுடன் கலப்பதுதான் புராணத்தின் வாயிலாகச் சூரன் வதையென்றும் தேவசேனை திருமணம்,

வள்ளி திருமணம் என்றும் காட்டப்படுகின்றன. அசுரப் பண்புகளைப் போக்கி, சூரன் போன்றவர்களையும் எம்பெருமான் ஆட்கொள்ளுகின்றார். இதனைப் போற்றுவதற்குக் கந்தர்சட்டி விழா நடைபெறுகின்றது. மன இருளாகிய சூரனை வீழ்த்தி முருகப்பெருமானது சோதி வடிவத்தில் சேர்த்துக் கொள்வதே இக் கதையின் தத்துவமாகும்.

வள்ளி நாயகி இறையன்பின் பெருமையால் உயர்ந்த நிலை அடைகின்றாள். சீவான்மா பரமான்மாவுடன் ஒன்று சேர்வது கந்தர்சட்டியில் காட்டப்படுகின்றது. முருகனுடைய பன்னிரு தோள்களையும் போற்றித் தொழுது நாம் வலிமை பெறுகின்றோம்.

திருமயிலைக் கபாலீச்சுரத்திலும் இவ்விழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. சிறுவர்கள் தாளினால் செய்த அம்புகளைச் சூரன்மேல் விடுவார்கள். மயிலாப்பூர்க் கோவிலில் முருகப் பெருமான் சிங்காரவேலனாகவும் பழநி ஆண்டவராகவும் காட்சியளிக்கின்றார். கற்பகாம்பாள் மயில் வடிவில் தவம் செய்கின்றாள்.

"இயலின் இயல்மயிலை நகரில் இனிதுறையும்
எமது பரதுரவ—பெருமாளே"

"மயிலைப் பதிதனில் உறைவோனே
மகிமைக் கடியவர் பெருமாளே"

"மயிலை மாநகர் மேவிய கந்தப் பெருமாளே"

"மலையரையன் மாதுதந்த சிறுவனென வேவளர்ந்து
மயிலைநகர் வாழவந்த பெருமாளே"

"மயிலாபுரி மேவிய பெருமாளே"

(திருப்புகழ்)

# 12. முருகன் புகழ் நூல்கள்

திருமுருகாற்றுப்படை :

இந்நூல் செந்தமிழ் வளம் நிறைந்தது. மனம் உருகச்செய்யும் சிறப்புடையது. கடைச் சங்கப் புலவர்களுக் குத் தலைவராய் வீற்றிருந்து தமிழ் வளர்த்த நக்கீரனார் அருளிச் செய்தது. படைவீட்டுத் திருப்பதிகள் ஆறின் சிறப்பை நன்கு விளக்குகின்றது.

''உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓஅற இமைக்கும் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை'

எனத் தொடங்குகின்றார்.

ஆறுதிருமுகங்களின் தொழில்களை விளக்கிப் பன் னிரு கைகளின் பெருமையைப் பேசுகின்றார்.

''விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை
உக்கம் சேர்த்தியது ஒருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை
அசைஇயது ஒருகை
அங்குசம் கடாவ ஒருகை
இருகை ஐயிருவட்டமொடு எஃகுவலம் திரிப்ப
ஒருகை மார்பொடு விளங்க
ஒருகை தாரொடு பொலிய
ஒருகை கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப
ஒருகை பாடுஇன் படுமணி இரட்ட
ஒருகை நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய

ஒருகை வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட
ஆங்குஅப் பன்னிரு கையும் பாற்பட இயற்றி''

எனப் பாடுகின்றார்.

''அறுவர் பயந்த ஆறமர் செல்வ
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பின் பழையோள் குழவி
வானோர் வணங்குவில் தானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவில் ஒருவ பொருவிறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொல்மலை
மங்கையர் கணவ மைந்தர் ஏறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே
அரும் பெறல் மரபின் பெரும்பெயர் முருக''

எனப் போற்றுகின்றார்.

அறுமுகப்பெருமானுடைய அருள் முழுவதும் பெற்ற அருணகிரியார் திருமுருகாற்றுப்படையைப் பல இடங்களில் வியந்து பாராட்டியுள்ளார்.

கடவுள் நெறிகளில் மிக்க பழைமையானது முருக வழிபாடு. தொல்காப்பியர் காலத்திலேயே முருக வழிபாடு மக்கள் வாழ்க்கையில் கலந்திருந்தது.

''வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தள்''

எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

நக்கீரர் ஒளியின் உவமையால் விளக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி, அறிவிறந்து நின்ற சுடராகவும், பந்தம் தணந்த பரஞ்சுடராகவும் காட்சியளிக்கின்றது.

'உலகம்' என்பது 'ஓம்' என்னும் பிரணவத்தின் அடிப்படை ஒலிகளால் எழுந்தது எனக் கூறுவர். அ+உ+ம் என்னும் மூன்று ஒலிகள் சேர்ந்து 'ஓம்' என ஆகும்.

**ஞாயிற்றின் உவமை :**

ஞாயிறு தானே இயங்கும் கடவுள் அன்று. கதிரவனை இயக்குபவன் பரம்பொருளாகிய இறைவன் கதிரவனுக்கு ஒளியைத் தந்து உலகம் உவக்குமாறு செய்கின்றான்.

'அருக்கனில் சோதி அமைத்தோன்' என மணிவாசகர் கூறுகின்றார். ஞாயிற்றின் ஒளி மிகமிகச் சேய்மையிலிருந்து வருவது. நிலவுலகை அடைந்த பின்னரும் அஃது எல்லா இடங்களிலும் பரவுகின்றது. அங்கிங்கெனாதபடி எங்கும் உலவுகின்றது. அருள் விளங்கும் இவ்வொளியே இறைவனது அருள் ஒளியாகும். இதனை இராமலிங்க அடிகள்,

'அருட்சோதி' 'அருட்பெருஞ்சோதி'

எனவும்,

'அருட்சோதித் தெய்வம் எனை ஆண்டுகொண்ட தெய்வம்'

எனவும் கூறுகின்றார்.

ஞாயிறு தன் ஒளியாலும் வெப்பத்தாலும் கடல் நீரை ஆவியாக்கித் தூய்மை செய்து உண்ணும் நீர் ஆக்குகின்றது. இஃதே போன்று அருள் ஒளியும் தனது ஆற்றலால் ஆன்மாவின் உடலைத் தூய்மை செய்கின்றது.

"தன்னையே எனக்குத் தந்தருள் ஒளியால்
என்னை வேதித்த என் தனி அன்பே"

என இராமலிங்க அடிகள் பாடுகின்றார்.

ஒளியைத் தரும் பரம்பொருள் பொதுவானது. நாம் காண்பதைக் கொண்டு காணமுடியாத ஒன்றை உண்டென்று துணிகின்றோம். நெருப்பும் புகையும் எப்போதும் உடன்நிற்பன. நெருப்பின்றிப் புகையில்லை. மலை உச்சியில் புகை எழுகின்றது. நெருப்பை நாம் காண இயலவில்லை. ஆனால், அப் புகையைக் கொண்டு நெருப்பு உண்டென்று சொல்கிறோம். பரம்பொருள் அருவநிலையில் உள்ளது, காண இயலாதது என உணர்ந்து கொள்கிறோம்.

"மக்கட்குக் கூற அரிதானது
கற்றுஎட் டத்தான் முடியாதது
மற்றுஒப்புக்கு யாதும் ஒவ்வாதது—மனதாலே
மட்டிட்டுத் தேட வொணாதது
தத்துவத்திற் கோவை படாதது"

என அருணகிரியார் விளக்குகின்றார்.

"இப்படியன், இந்நிறத்தன். இவ்வண்ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே"

என்பது அப்பர் வாக்கு.

"சொற்பதம் தெரியாப் பொருள்"

எனத் திருஞானசம்பந்தர் ஓதுகின்றார்.

அருள் ஒளியைப் பரம்பொருளின் ஆற்றலென நக்கீரர் உணர்த்துகின்றார். மெய்கண்டாரும்,

"அருள்உண்டாம் ஈசற்கு அதுசத்தி"

எனவும்,

"இரவிபோல் நிற்கும் அரன்"

எனவும் கூறுகின்றார்.

ஞாயிறு தன் ஆற்றலால் தாமரையை மலரச் செய்து மணம் அளிக்கின்றது. இறைவனும் ஆணவமலத்தால்

கட்டுண்டு கிடக்கும் ஆன்மாவின் கட்டவிழ்த்துத் தெய்வ மணம் அளிக்கின்ருன்.

முருகப் பெருமானின் மெய்ப்பொருள் நிலே அருவ மாகும். அது மனம் வாக்குக்கு எட்டாதது. அருவமாய் நின்ற சோதி உலகம் உய்ய ஒரு திருமேனியுடன் தோற்றம் அளிக்கின்றது. அருள் ஒளி வீசுகின்றது.

பரம்பொருளும் சக்தியும் இயைந்து நிற்கும் உருவமே 'வாள் நுதல் கணவன்' உருவமாகும். சிவமின்றிச் சக்தி இல்லே. சக்தியின்றிச் சிவமில்லே. உலக உயிரினங்க ளெல்லாம் ஆண் பெண்ணுய் அமைந்து அன்புடன் வாழ் வதைக் காணுகிருேம். இறைவனேடு இயைந்த சக்தி அல்லது ஆற்றல் ஆணும் பெண்ணுமாக விளக்கிக் காட்டப்படுகின்றது.

அன்பின் இயல்பு இளகி இளகி உருகும் உள்ளத் தைத் தருவது.

"அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்"

என்பார் திருவள்ளுவர். உருகிய உள்ளங்கள் ஒன்றுபடு கின்றன. உருகாதவை ஒன்றுபடுவதில்லே.

"அன்போடு உருகி அகங் குழை வார்க்கன்றி
என்பொன் மணியினை எய்தவொண் ணுதே"

என்பது திருமூலர் திருமந்திரம்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்"

எனவும் கூறுகின்ருர்.

கடல் நீருடன் ஞாயிற்றின் ஒளி கலக்கும் உவமை யைக் காட்டி நீரென உருகிய ஆன்மா இறைவனேடு கலக்கும் தன்மையைத் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் உணர்த்துகின்ருர்.

அருவமாகிய ஆவி உருவேற்று மழை நீர் ஆகின்றது. பரம்பொருள் அருவ நிலையை நீத்து உருவம் ஏற்பது இதற்கு ஒப்பாகும். அருவத்திலிருந்து உருவம் ஏற்ற மழைநீர் மக்களுக்குப் பயன்படுவது போல் அருவத்திலிருந்து உருவம் ஏற்ற பரம்பொருளும் மக்களுக்குப் பயன்படுகின்றது. அருள் மழை பொழிகின்றது வறண்ட உள்ளங்கள் குளிர்ந்து மலர்கின்றன. எங்கும் தெய்வ மணம் கமழ்கின்றது. மரணமிலாப் பெருவாழ்வு தருவது இறைவனது அருள்மழையாகும்.

தமிழ் மொழி தோன்றிய காலம் முதல் தமிழ் நாட்டில் கடவுள் நிலைகளைப் பற்றிய கருத்துகள் வழங்கியிருத்தல் வேண்டும். தமிழ்மொழி, கடவுள் நெறி, தமிழர் பண்பாடு இவையெல்லாம் ஒன்றி இருக்கின்றன. இவற்றின் கால எல்லையைக் காண்பதரிது.

முருகப் பெருமானின் அன்புருவத் திருமேனி அழகுருவத் திருமேனியாகத் திகழுகின்றது. முருகு என்னும் அழகின் பண்பைப் பெற்று அழகே ஆனவர் முருகப் பெருமான். அழகே அவர் உருவத் திருமேனியாகும். அன்பு தருகின்ற ஆர்வத்தின் அழகு முருகனிடம் திகழ்கின்றது. அன்புதரும் இரக்கத்தின் அழகு அங்கே அமர்ந்திருக்கின்றது. அன்பருக்கு இரங்கி அருள் பொழியும் அழகாக விளங்குகின்றது.

முருகப் பெருமானிடம் அன்போடு உருகிநின்ற வள்ளியம்மையாரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது அப் பெருமானின் அழகு.

தன்னந்தனி நின்றநிலை, தன்னையே இழந்த நிலை, சொற்பதம் கடந்த நிலையை எப்படிச் சொல்ல முடியும்!

'இன்னம் ஒருவர்க்கு இசைவிப்பதுவோ' என்றார் அருணகிரியார்.

உள்ளத்தே எழுகின்ற ஒளி ஞாயிறுபோல் தோன்றி நிலவுகின்றது. காண்பரிய பேரொளியாய்ப் பரவுகின்றது. இறைவனோடு கலக்கும் நிலையைத் தருகின்றது. சிந்திப்பவர்க்குச் சிறந்த தேனைப் பொழிவது திருமுருகாற்றுப் படை.

"நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தான்நினைத்த எல்லாந் தரும்"

என்பது நூற்பயன்.

ஓர் அன்பர் இருமலினால் இளைத்து மூச்சுவிட முடியாமல் அவதிப்பட்டார். கந்தசாமிப்புலவர் என்பவரிடம் நாள்தோறும் பாடம் கேட்டுத் திருமுருகாற்றுப்படையை ஓதி வந்தார். அவருக்கு அது மனப்பாடம் ஆகிவிட்டது. அவர் தம்முடைய நோய் நீங்கி நலமுடன் வாழ்ந்து வந்தார்.

"உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே"

"முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்"

என முருகனை வணங்குவோம்.

உலக வாழ்வில் நமக்கு வரும் துன்பங்களைப் போக்கி அருள்பவன் முருகப்பெருமான். முருகனிடம் நம்மைக் கொண்டுபோய்ச் சேர்த்து ஞானப் பேற்றினைத் தருவது திருமுருகாற்றுப் படையாகும். முருகப் பெருமானை அடைந்து பேரின்பத்தில் திளைத்த ஒருவன் இறைவன்

அருளை நாடிச் செல்லும் மற்ருேர் அடியவனை முருகனிடம் வழிப்படுத்துவதுபோல் இந் நூல் பாடப்பட்டுள்ளது. இதனை உளங்கசிந்து உருகிப் பாடுகின்றவர்களின் துன்பம் மறையும் என்ற தத்துவத்தைப் பூதத்தின் கதை விளக்குகின்றது.

''குன்றம் எறிந்தாய் குரைகடலில் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய் — என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய்என் உள்ளத்து உறை''

''குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங்கு அமரர்இடர் தீர்த்ததுவும் - இன்றென்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல்''

என நக்கீரர் பாடுகின்ருர்.

முருகன் திருவருள் வெள்ளத்தில் திளைத்து உய்வு பெறுவதற்கு நம்மையெல்லாம் ஈடுபடுத்தவேண்டுமென்று நக்கீரர் தமிழையும் அன்பையும் கலந்து திருமுருகாற்றுப் படையாக அளிக்கின்ருர்.

கடற்கரை ஓரத்தில் வீற்றிருக்கும் செந்திலாண்டவன் கருணைத்திறத்தைக் கூறி அங்குச் செல்வதற்கு வழிகாட்டுகின்ருர். மற்றப் படைவீடுகளைப் பற்றியும் புகழ்ந்து பாடுகின்ருர். அன்பர்கள் கேட்கும் வரங்களை அளிப்பவன் முருகன். வீரர்க்கு வீரனுகவும் வெற்றிக்கு நாயகனுகவும் விளங்குகின்ருன் பழநி ஆண்டவன். உலக மக்களுக்கு அருள்புரிவதோடு சேனைத் தலைவனுக இருந்து தேவர்களையும் ஆண்டு அருள்புரிகின்ருன். குறிஞ்சிநில மக்களின் குல தெய்வமாக விளங்குகின்ருன். அடியார்கள் காவடி எடுத்தும், பாற்குடம் எடுத்தும் முருகனைக் கொண்டாடுகின்றனர். முருகனை வழிபட்டால் அழகும் அன்பும் ஆற்றலும் வெற்றியும், அறிவும் திருவும் வந்

டையும். அகம் கனிந்து உருகினல் அவன் அருளைப் பெறலாம்.

''ஆறுமுகப் பெருங்கருணைக் கடலே தெய்வ
யானைமகிழ் மணிக்குன்றே அரசே முக்கட்
பேறுமுகப் பெருஞ்சுடர்க்குட் சுடரே செவ்வேல்
பிடித்தருளும் பெருந்தகையே பிரம ஞானம்
வீறுமுகப் பெருங்குணத்தோர் இதயத் தோங்கும்
விளக்கமே ஆனந்த வெள்ள மேமுன்
தேறுமுகப் பெரியஅருட் குருவாய் என்னைச்
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே''
(திருவருட்பா)

திருப்புகழ் :

முழுமுதற் கடவுளாகிய முருகப்பெருமான் திருவருள் பெற்று அவ்வருளை நாமும் பெறும்பொருட்டு அருணகிரி நாதர் பதினாயிரம் திருப்புகழையும் பிற நூல்களையும் பாடியருளினார். வேதாகமசாரமாகிய திருப்புகழை அன்புடன் ஓதுபவர்கள் எல்லா நலன்களையும் பெறுவர்.

நமது தவக்குறைவால் திருப்புகழ்ப் பாடல்கள் முழுவதும் கிடைக்கவில்லை. அன்பர்களின அரிய முயற்சியால் 1311 பாடல்கள் நமக்குக் கிடைத்துள்ளன.

''எம் அருணகிரிநாத ரோது
பதினாயிரம் திருப்புகழ் அமுதமே''

எனக் கூறப்பட்டிருக்கின்றது.

'வாக்கிற்கு அருணகிரி'

என்றும்,

'கருணைக்கு அருணகிரி'

என்றும் புகழ்பெற்றவர் அருணகிரிநாதர்.

அருணகிரியாரின் பெருமையைத் தாயுமானவர் பின்வருமாறு கூறுகின்றார் :-

"ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்
சாற்றறிதென் றேசற்றார் தன்னனையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டி னான்"

"கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொன்ன
எந்தை யருள்நாடி யிருக்குநாள் எந்நாளோ
யான்றான் எனஅற லில இன்பநிட்டை யென்றருணைக்
கோன்று னுரைத்தமொழி கொள்ளாயே."

அருணகிரியார் ஆண்டவனையடைய அன்பு நெறியே சிறந்ததெனக் கூறுகின்றார். தம்மை ஆட்கொண்ட குமரப் பெருமான் புகழைப பாடும்போது மற்றத் தெய்வங்களையும் பாராட்டிப் பேசுகின்றார். தமிழ்மொழியின் பெருமையை எடுத்துக் காட்டுகின்றார் சமயவாதங்களையும் சமயப் பூசல் களையும் தவிர்க்கவேண்டுமெனக் கூறுகின்றார்.

"ஈதலே அறம்"

என்பார்.

'தானம் என்றும் இடுங்கோள்'

'நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்கள்

எனக் கூறுகின்றார்.

எப்போதும் குமரனை வாழ்த்த வேண்டும்.

'வேலும் மயிலும் துணை'

என்பதே மந்திரம்.

'வேலுமயிலும் நினைந்தவர் தம்துயர்
தீர அருள்தரு கந்தவேளே'

'பயந்த தனி வழிக்குத் துணைவடி
வேலும்செங் கோடன் மயூரமுமே'

எனப் பாடுகின்றார்.

இறைவனுடைய திருப்பெயர்களை ஓதிச் சரணடைதல் வீண் போகாது.

'ஆன திருப் பதிகம்அருள் இளையோனே
ஆறு திருப் பதியில்வளர் பெருமாளே'

என ஆறு படை வீடுகளைப் பொதுவாகப் பாடுகின்றார். ஒவ்வொரு படைவீட்டிற்கும் தனித் தனியாகவும் திருப்புகழ் பாடியுள்ளார் :

திருத்தணி

"சலமிடைபூவின் நடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே."

பழமுதிர்சோலை

"திருமலி வான பழமுதிர் சோலை
மலைமிசை மேவு—பெருமாளே"

திருச்செந்தூர் :

"செஞ்சமரை மாயும் மாயக் கார
துங்கரண சூர சூரைக் கார
செந்திலநகர் வாழும் ஆண்மைக் காரப் பெருமாளே."

திருவாவினன்குடி :

"ஆர ணம்பயில் ஞான புங்கவ
சேவ லங்கொடி ஆன பைங்கர
ஆவி னன்குடி வாழ்வு கொண்டருள் பெருமாளே.'

திருப்பரங்குன்றம் :

'செந்திலம் கண்டிக் கதிர் வேலா
தென பரங் குன்றிற் பெருமாளே.'

திருஏரகம் :

'ஏமவெற் புயர்ந்த மயில்வீரா
ஏரகத் தமர்ந்த பெருமாளே.'

குன்றுதோருடல் :

'பதிளங்கி லுமிருந்து விளையாடி
பலகுன்றி லும் அமர்ந்த பெருமாளே.'

முருகன் கோயில் கொண்டிருக்கும் மற்ற இடங்களைப் பற்றியும் பாடுகின்றார் :

கதிர்காமம் :

''மாடமதில் சுற்றிய திரிகூட கிரியில் கதிர்செய்
மாநகரி யிற்கடவுள்— ஆயக்காரனும்.''

திருச்செங்கோடு :

''சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச்செந்தமிழ் நூல்விரித் தோனை.''

வள்ளிமலை :

''வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே.''

விராலிமலை :

''கோடாமல் ஆரவார அலைஎறி
காவேரி ஆறுபாயும் வயலியில்
கோனுடு சூழ்விராலி மலையுறை—பெருமாளே''

திருப்புகழை எல்லோரும் படிக்கவேண்டும். திருப்புகழைப் படித்தால்,

''ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம் பெறலாம்—மோனவீடு
ஏறலாம் யானைக்கு இளையான் திருப்புகழைக்
கூறினேர்க்கு ஆமேஇக் கூற்று''

எனச் சிறப்பாகக் கூறப்படுகின்றது.

"ஆறுமுகம் தோன்றும் அழகியவேல் தோன்றும்அவன்
ஏறுமயில் தோன்றும் எழில்தோன்றும்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினோர் பால்"

"திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே
ஒருத்தரை மதிப்பதில்லை உன்றனருளாலே
பொருப்புக மிகப்பொருது வென்றுமயில் மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்றபெருமாளே."

ஆறு திருமுகங்களின் தொழில்களைக் கூறவந்த அருணகிரியார் ஆறுமுகம் ஆனதன் பொருள் என்ன வென்று முருகப் பெருமானையே கேட்கின்றார்:

"ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
வள்ளியைம ணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதிஅரு ணாசலம் அமர்ந்தபெருமாளே."

திருப்புகழ் மிகவும் சிறந்த அறிவு நூலாகும். அருணகிரி நாதரிடம 'திருப்புகழைப் பாடு' என்று முருகனே கேட்டு அதற்குத் 'திருப்புகழ்' என்ற பெயரையும் சூட்டி யுள்ளார்.

"திருப்புகழ் விருப்பொடு செப்பென
எனக்கருள்கை மறவேனே"

என அருணகிரியார் பாடுகின்றார். திருப்புகழ் பாடும் திறமையும் ஊக்கமும் அளித்தவர் முருகன். இத்துணைச் சிறப்பு வாய்ந்த திருப்புகழை ஓதி உணர்ந்து வழிபாடுகள் செய்யவேண்டும்.

தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் முருகன் கோவில் கொண்ட இடங்களுக்கெல்லாம் அருணகிரியார் திருப்புகழ் பாடியுள்ளார் முருகன் திருவருளால் சிவநெறிச் செல்வராகி அவன் புகழைப் பாடுகின்றார். தமிழ்க் கடவுளை நமது அருமைத் தமிழால் பாடிப் பரவுகின்றார்.

"மதுர கவிஅடைவு பாடி வீடறிவு
முதிர அரிய தமிழ் ழாசை யாகவொளி
வடிவ முடையவழி பாடுசேருமருள் தந்திடாதோ"

"செஞ்சொல்சேர் சித்திரத் தமிழால உன்
செம்பொன் ஆர் வத்தைப் பெறுவேனோ"

என வேண்டுகின்றார்.

மூவர்களும் தானாகி, அவர்க்கு மேலும் ஆகி எல்லாமும் ஆகி நிறதம பரம்பொருளை முருகன் என்று தம் பாடல்களில் கூறுகின்றார் ஆசையும் ஆணவமும் அடங்கப் பெற்றாலன்றி முருகனை அடைய முடியாது என்கின்றார் பேரின்ப நிலையை அடைவதற்குத் தடையாக நிற்றலின் ஆசையை விலக்க வேண்டுமெனக் கூறுகின்றார். முருகனது அருளால் ஆசையாகிய சங்கிலி பொடிப் பொடியாகத் தூள்படுகின்றது. ஆசை முற்றிலும் அழிந்தால் இறைவனுடன் ஒன்றுபடலாம். அன்பு முதிர்ந்து அருளாகப் பழுக்கின்றது.

"தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளம் துகளா கியபின்
பேசா அநுபூ திபிறந் ததுவே" (கந்தரநுபூதி)

"ஆசை அறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்"

"ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே" (திருமந்திரம்)

கந்தரநுபூதி:

அருணகிரிநாதர் அருளிய நூல்களில் முதன்மை பெற்றுத் திகழ்வது கந்தரநுபூதி இஃது ஒரு மந்திர நூல். தாயுமானுர் இதனை ஓர் உயர்ந்த நூலாகப் பாராட்டு கின்ருர். மந்திரங்களைப பாமாலையாகத் தொடுத்து அருண கிரியார் முருகப்பெருமானுக்குச் சூட்டுகின்ருர். இதில் ஐம்பத்தொரு பாடல்கள் அமைந்துள்ளன.

உயிர்களுக்குப் பற்றுக்கோடாக இருப்பவன் கந்தன். 'அநு' என்ருல் தொடர்வது 'பூதி' யென்ருல் ஒன்று படுதல். கந்தனோடு ஒன்றுபடுவது கந்தரநுபூதி.

அருணகிரிநாதருக்கு முருகப்பெருமான் நேரில் தோன்றி அருளுரை வழங்கினர். முருகன் திருவருள் பெற்றவர் அருணகிரியார். அவர் எல்லாப் பற்றுக்களையும் துறந்தவர். உள்ளத்தை உருகச் செய்தால்தான் ஆண்ட வனை அடைய முடியும். அவன் திருவருளைப் பெற வேண்டுமெனில் கெட்டியாக இருக்கும் மனம் இளக வேண்டும்.

முருகன் கையிலிருப்பது அறிவாற்றலின் சின்ன மாகிய வேல். தன்னை வணங்குபவர்களுக்கு முருகன் அறிவாற்றலைத் தருகின்ருன். ஏழைகளுக்கு இல்லை யென்னுமல் கொடுத்து உதவவேண்டும். ஏழைகளுக்குப் போட்டது ஆண்டவனுக்குப் போய்ச்சேரும்.

"நடமாடும் கோயில் நம்பர்க்கொன்று ஈயின்
படமாடும் கோயில் பகவர்க்கு தாமே.'

ஆண்டவன் தன்னை நினைக்கும் அடியார்கள் உள்ளததில் கோயில் கொள்கின்ருன். முருகன் அடியார் களுக்கு யமனைப் பற்றிக் கவலை கிடையாது.

"அந்தகனுமெனை யடர்ந்து வருகையினில்
அஞ்சலெனவலிய மயில்மேல் நீ

அந்த மறலியொடு உகந்தமனி தன் நமது
அன்பன் எனமொழிய வருவாயே''

என்பது அருணகிரியார் வாக்கு.

கந்தரநுபூதியை ஓதி உணர்ந்த அடியார்களைக் கண்டு யமன் அஞ்சுகின்றான். கந்தனை அடைவதற்கு ஆதாரமாக இருப்பது கந்தர நுபூதி சொல்லும் சிந்தனையும் அவன் வயமாக இருத்தல் வேண்டும். முருகப்பெருமானிடம் சரணடைதல் வேண்டும்.

முருகன் படைவீடுகள் ஆறு, மந்திர எழுத்துக்கள் ஆறு, சமயங்கள் ஆறு, அவனுடைய முகங்களும் ஆறு. ஆறுமுகம், ஆறுமுகம் என்று சொல்ல வேண்டும். ஆறுமுகப் பெருமானுடைய திருப்பெயரைப் பலகாலும் ஓதி உலகமாயையினை வெல்லுதல் வேண்டும்.

''மகமா யைகளைந் திடவல்ல பிரான்
முகமா றுமொழிந் தும்ஒழிந் திலனே
அகமா டைமடந் தையர்என் றயரும்
சகமா யையுள்நின் றுதயங் குவதே.'' (கந்தரநுபூதி)

அநுபூதி பெற்றுச் சிவத்தில் ஒடுங்குவதே சிறப்பானது என வற்புறுத்தப்படுகின்றது.

முருகப்பெருமான் வேற்படையை விடுத்துச் சூரபன்மனுடைய ஆணவத்தை அடக்கினார். மனத்தின் மாசு நீங்கினால்தான் ஆண்டவனை அடைய முடியும். மாசில்லாத மனத்தில் முருகக் கடவுள் வீற்றிருப்பார்.

முருகனையே குருநாதனாக எண்ணி வழிபடல் வேண்டும். பல பிறப்புக்களில் முயன்றுவது முருகனைக் குருநாதனாக அடையவேண்டும். மனம் தெளிந்தால் முருகனைக் காணலாம். ஆண்டவன் விருப்பப்படி நாம் நடக்கவேண்டும். அவர் திருவுளப்படி எதுவும் நிகழும்.

"வேண்டத் தக்கது அறிவோய்நீ
வேண்ட முழுதும் தருவோய்நீ"

என்பார் மணிவாசகர்.

ஆண்டவன் பேரருளுடையவன். முடிவில்லாத ஆற்றலுடையவன். கனவிலும் நனவிலும் ஆண்டவனை மறக்கக் கூடாது. கந்தரநுபூதியை நாள்தோறும் படிக்க வேண்டும். சண்முக கவசம் பாடினால் உடம்பிலுள்ள நோய் நீங்கும். அநுபூதியைப் பாராயணம் பண்ணினால் எல்லா நலங்களும் உண்டாகும். இரசாயனத் தொழிற்சாலையில் ஒரு பொறி இயல் வல்லுநர் இருந்தார். அவர் ஐம்பத்தொரு பாடல்களையும் கடகடவென்று பாடுவார். சமயம் கிடைக்கும் போதெல்லாம் திருச்செந்தூர் முருகனைக் காணச் செல்வார். முருகன் அருளால் அவர் உயர்ந்த நிலையை அடைந்தார்.

முருகனை வணங்கினால் அருட்செல்வத்தை அள்ளிக் கொடுப்பான். இடர்ப்படுகின்ற வேளையில் 'முருகா' என்றால் அவனுடைய திருமுகங்கள் காணப்படும். துன்பப் பட்டவர்களைக் காப்பதற்கு அவனுடைய திருக்கரங்கள் தோன்றும். ஆண்டவன் கருணைக் கடவுளாக இருக்கின்றான். அவன் அருள் இருந்தால்தான் நம் எண்ணங்கள் நிறைவேறும். அவனை நாம் மறந்தாலும் அவன் நம்மை மறக்கமாட்டான்.

"உன்னை நான் என்னவென்று சொல்வேன்"

என அருணகிரியார் ஏங்குகின்றார்.

"பொன்னே மணியே பொருளே அருளே
மன்னே மயிலே றியவா னவனே"

எனப் பாடுகின்றார்.

கந்தரநுபூதியைப் படிக்கும் அடியார்கள் விதியையும் வெல்லலாம். திருச்செந்தூர் முருகன் கால்பட்டழிந்தது

அயன் கையெழுத்து எனக் கந்தரலங்காரத்தில் பாடுகின்றார். தன்னை மறந்த நிலையில் இருக்கும்போது முருகனது அருட்சக்தி தோன்றும். 'யான் எனது' இரண்டையும் விட்டால் அருள் கிடைக்கும். சக்தி என்ற அருள் மிகுதியாகப் பதிந்தால் சிவத்தோடு ஒன்றுபடலாம்.

முருகப்பெருமான் பார்வையினாலேயே மெய்யுணர்வை அளிக்கின்றான். அப் பார்வை ஆணவ அழுக்கைத் துடைத்து அநுபூதியை வழங்குகின்றது.

"ஆணவ அழுக்கடையு மாவியை விளக்கி
அநுபூதி யடைவித்த தொருபார்வைக் காரன்"

(திருவகுப்பு)

இறைவன் எங்கும் இருக்கின்றான். அவன் செவ்வானம் போன்றவன். செம்மைப் பண்புடையவன்; ஆன்மாக்களுக்கு நன்மையே செய்பவன்; செம்மைப் பண்பினையே தன் வடிவாகக் கொண்டவன்.

'முருகு' என்ற சொல்லில் இருக்கும் 'உ'கரம் காக்கும் தன்மையுடையது. உலகிலுள்ள உயிர்களைக் காக்கும் கடவுள் முருகன். தமிழ்மொழியில் வல்லோசை, மெல்லோசை, இடைஓசை என்ற மூன்று ஓசைகள் இருக்கின்றன. இம் மூன்று ஓசைகளும் 'முருகு' என்ற சொல்லில் அடங்கியுள்ளன. மென்மையான கடவுள் ஆதலால் மெல்லோசை முதலில் அமைந்துள்ளது.

கந்தரநுபூதியை அருணகிரிநாதர் மூலமாக முருகன் நமக்கு அளித்திருக்கின்றார். 'குமரா நம' என்று ஒரு முறை சொன்னால் பிறவித் துன்பம் நீங்கிவிடும்.

"குமரா நமஎன்று கூறினர் ஓர்கால்
அமரா வதியாள்வ ரன்றி—யமராசன்
கைபுகுதார் போரூரன் கால்புகுவார் தாய்உதரப்
பைபுகுதார் சேரார் பயம்"

எனச் சிதம்பர சுவாமிகள் கூறுகின்றார்.

நமது காது ஓங்கார வடிவத்தில் அமைந்திருக்கின்றது. ஆடும் மயில் ஓங்காரம், உலகமே ஓங்கார வடிவமாக இருக்கின்றது.

முருகப் பெருமானே பிரணவத்திற்குப் பொருள் கூறுகின்றார். தந்தைக்கு உபதேசம் செய்கின்றார்:

"கொன்றைச் சடையற் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே"

என அருணகிரியார் பாடுகின்றார். வேல் என்னும் சக்திக்கு வழிபாடு செய்தால் வினைகள் நீங்கும்.

"வினைஓ டவிடும் கதிர்வேல் மறவேன்"

எனப் பாடுகின்றார்.

சீவனும் சிவனும் ஒன்றுபடும் நிலையைப் பரமசுகம் என்கின்றார்:

"இருவினைமும் மலமுமற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வரை பரமசுகம் அதனையருள்"

என்கின்றார்.

"நின்னை உணர்ந்துஉணர்ந்து எல்லாம்
ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு
என்னை மறந்திருந்தேன் இறந்
தேவிட்டது இவ்வுடம்பே"

எனக் கூறுகின்றார்.

ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெருஞ் சோதி தான் முருகனாக வந்தது. அருணகிரியார் சிவயோகம் செய்து அருள்மயமாகி விட்டார். 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்று அருட் பாடல்களை நமக்காகப் பாடிக் கொடுத்திருக்கின்றார். தாம் பெற்ற மெய்யறிவை எல்லோருக்கும் பகிர்ந்து கொடுக்கின்றார்.

'ஆறுமுகப் பெருமானிடம் நெஞ்சம் உருகும் பொருட்டு அநுபூதி என்ற பாமாலையைப் புனைகின்றேன்' எனக் கூறுகின்றார். மயிலையும் வேலையும் சேவலையும் பாடும் பணியை எனக்குக் கொடுத்தருள்வாயாக என வேண்டுகின்றார்.

"ஆடும் பரிவேல் அணிசே வலெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனியா னைசகோ தரனே."

'ஆ' என்பதில் அகரமும்' 'டு' என்பதில் உகரமும் பின்னர் 'ம்' என்ற ஒற்றும சேர்ந்து 'ஓம்' ஆகின்றது. அருணகிரியார் இப் பாடலில் நமக்குப் பிரணவத்தை நினைவூட்டுகின்றார்.

முருகவேள் உணர்த்திய அநுபூதி நிலையை அவரவரே அநுபவித்து உணர்தல் வேண்டும். அஃது உரைக்கும் தரமன்று.

"செவ்வான் உருவில் திகழ்வே லவன்அன்று
ஒவ்வா ததென உணர் வித் ததுதான்
அவ்வா றறிவார் அறிகின் றதலால்
எவ்வாறு ஒருவர்க் கிசைவிப் பதுவே."

முருகன் அருட்குருவாக வந்து உணர்த்த உணர்ந்ததைப் பிறர்க்குச் சொல்லி உணர்த்த முடியாது. ஆன்மா அடையும் அநுபூதியைப் பிறருக்குச் சொல்லுதல் எளிதன்று.

தனிமையான நிலையில் அடியேன் பெற்ற பேரின்ப நிலையை இத் தன்மைத் தென்று பிறர்க்கு விளக்கிக் கூற முடியாது எனக் கூறுகின்றார்.

"தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் ஒருவர்க்கு இசைவிப் பதுவோ

மின்னும் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னம் களையும் கிருபைசூழ் சுடரே.''

தத்துவம் கடந்த தனிப்பெரும் பொருளை இத் தன்மைத்து என்று கூற இயலாது. அநுபவித்து அறிய வேண்டிய ஒன்றை அநுபவித்தாலன்றி அறிய முடியாது என்பது கருத்து.

முருகப் பெருமானே குருவாக வந்து அடியேனுக்கு அருள்புரிவாயாக என வேண்டுகின்றார்.

''உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.''

எல்லாமாகவும் அல்லதாகவும் இருக்கும் குகனே எனப் போற்றுகின்றார். உரு, அரு, அருஉரு ஆகிய மூன்று நிலைகளைக் கொண்டும் அதனைக் கடந்தும் விளங்குபவன் முருகன். பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு இறைவன் குருவடிவமாக வந்து அருள் புரிவான். முருகனிடம் மனம் உருகி வேண்டினல் குருவடிவாய் வந்து திருவருள் புரிவான் எனக் கூறி முடிக்கின்றார்.

இந் நூலில் 'மெய்ப் பொருள்' என்பதனை நான்கு இடங்களில் கூறுகின்றார்.

''அமரும் பதிகேள் அகமாம் எனும்இப்
பிமரம் கெடமெய்ப் பொருள்பே சியவா''

''காகா எனஎன் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா''

''அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதே சம்உணர்த் தியவா''

''கரவா கியகல் வியுளார் கடைசென்று
இரவா வகைமெய்ப் பொருள்ஈ குவையே.''

குருபரனாகிய முருகனைக் குருவாகக் கொண்டாலன்றி மெய்ப்பொருளை உணர முடியாதெனக் கூறுகின்றார் :

"முருகன் தனிவேல் முனிநங் குருவென்று
அருள்கொண்டு அறியார் அறியுந் தரமோ
உருவன்று அருவன்று உளதன்று இலதன்று
இருளன்று ஒளியன்று எனநின் றதுவே."

**கந்தர் அலங்காரம் :**

கந்தர் அலங்காரம் என்பது கந்தப் பெருமானுடைய வடிவழகையும், அவருடைய ஊர்தி, படை, கொடி முதலியவற்றின் பெருமைகளையும் விளக்குவதாகும். இந் நூலில் அரிய பெரிய கருத்துக்கள் பொதிந்து கிடக்கின்றன. அறஞ்செய்தல், யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, மரணத்திற்கு அஞ்சாமை, சிவயோகம் முதலிய பொருள்களைப் பற்றி அருணகிரியார் எடுத்துரைக்கின்றார். நாள்தோறும் பாராயணம் செய்வோர் துன்பம் நீங்கி இன்புற்றிருக்கலாம். கந்தவேள் அருளைப் பெற்று நலமுடன் வாழலாம்.

கந்தரலங்காரத்தை ஓதுவார் அரசனுக்கும் நமனுக்கும் அஞ்சார். நரகிடை அணுகார். கொடிய விலங்கினால் துன்ப மெய்தார் என 101 ஆவது பாடலில் பாடுகின்றார்.

"சலங்காணும் வேந்தர் தமக்குமஞ்
சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு
கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்கும் கரடிக்கும்
யானைக்கும் கந்தன் நன்னூல்
அலங்கார நூற்று ளொருகவி
தான்கற் றறிந்தவரே"

வடிவேற்பெருமான் அடியேனுக்கு அறிவுறுத்திய பொருள் ஒன்றுண்டு அஃது எல்லாம் கடந்த இடத்தில் இலங்குவது எனக் கூறுகின்ருர்.

திருச்செங்கோட்டில் வீற்றிருக்கும் வேலவரே, உடல் அழிவதற்குமுன் என்னைக் காத்தருள்வீராக என வேண்டு கின்ருர்.

குமாரக் கடவுளின் அடியார்களை நாளும் கோளும் வினையும் வருந்தமாட்டா. அவை வலியழிந்து ஒழியும். அவர்களுக்கு எந்நாளும் துன்பமில்லை.

"நாளென் செயும்வினை தான்என்
செயும்எனை நாடிவந்த
கோள்என் செயும்கொடுங் கூற்றுஎன்
செயும்கும ரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றி, னே"

ஊழ்வினையும் தன் ஆற்றல் இழந்து முருகனடியார்களை விட்டு நீங்கும். வினையை அறுப்பது வேல்.

"தீவினை யெலாமாய நீடுதனி வேல்விடும்
அடங்கல் வேலா"

வேலையுடைய விமலனை வணங்கும் அடியார்களை வினைத் துன்பம் சாராது.

முருகனை அடைந்தவர்களுக்குப் பிறவித் துன்ப மில்லை.

"சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்அவன்
கால்பட் டழிந்ததுஇங்கு என்தலை மேல்அயன் கையெழுத்தே."

இப் பாடல் மிகவும் அழகாக அமைந்திருக்கின்றது. இதனைப் பாடினால் இன்ப ஊற்றெடுக்கின்றது.

எங்கும் நிறைந்திருக்கும் பெருமானை என் கண்ணாரக் கண்டேன். ஆறுமுகத்துடன் பன்னிரு தோள்களுமாய இனிய அமுதத்தைக் கண்டேன் எனக் கூறுகின்றார்.

"பத்தித் திருமுகம் ஆறுடன்
பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுதுகண்டேன்
செயன்மாண்டு அடங்கப்
புத்திக் கமலத் துருகிப்
பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுர ளும்பர
மானந்த சாகரத்தே."

பரமானந்த சாகரம் என்பது சிவம். அதில் வெளிப்பட்டது முருகன் என்னும் அமுதம். செயலை ஒழித்து உலகை மறந்த நிலையில் இறைவனைக் காணுகின்றார்.

கந்தப்பெருமானுடைய திருவடிகள் விழிக்குத் துணையாகவும், முருகா என்னும் நாமம் மொழிக்குத் துணையாகவும், பன்னிருதோள்கள் முன்பு செய்த பாவத்தைப் போக்கவும், வேலும் மயிலும் வழிக்குத் துணையாகவும் நின்று அருள்புரியும்.

"விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள்
மெய்ம்மை குன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள்
முன்பு செய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு தோளும்
பயந்த தனி
வழிக்குத் துணைவடி வேலும்செங் கோடன்
மயூ ரமுமே."

தனித்துத் துணையின்றிச் செல்லும் வழியில் நமக்குத் துணையாக வருவது வேலும் மயிலுமேயாம்.

திருச்செங்கோட்டு முருகனை அருணகிரியார் பல இடங்களில் வியந்து பாராட்டுகின்றார். இந்த மலைமேல் ஒருபுறம் முருகனும், மற்றொரு புறம் அம்மையப்பனும் வீற்றுள்ளனர். 'அர்த்தநாரீஸ்வரர்' பாதி ஆணும் பாதி பெண்ணுமாகக் காட்சியளிக்கின்றார். முருகப்பெருமான் மிகவும் அழகுடன் தோற்றமளிக்கின்றார்.

முருகனை மறவாது சிந்திப்பவர்க்கு யாதொரு குறைவுமில்லை

"சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
 வெற்பனைச் செஞ்சுடர் வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல் விரித்
 தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
 கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவா
 தவர்க்கொரு தாழ்வில்லையே."

உயிருக்கும் உணர்வுக்கும் ஒப்பற்ற நலனைத் தருவது செந்தமிழ். செந்தமிழ்க் கடவுளாகிய முருகன் தமிழிலே வளர்ந்து தமிழிலே வாழ்ந்த தமிழ்த்தாய் வள்ளியம்மையை மணந்து கொண்டார். தமிழ்ப் பேச்சை முருகன் விரும்பிக் கேட்கிறான்.

"தேனென்று பாகென்று உவமிக்கொணாமொழித்
 தெய்வவள்ளி கோன்"

என்பது அருணகிரியார் வாக்கு.

திருச்செங்கோட்டில் எழுந்தருளி யிருக்கும் அழகு முருகனைக் காண நாலாயிரம் கண்கள் வேண்டுமெனக் கூறுகின்றார்.

"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
 மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்

சேலார் வயற்பொழில் செங்கோடனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரம்கண் படைத்தில னேஅந்த நான்முகனே''

என்று பாடுகின்றார்.

முருகன் என்றும் மாறாத குழந்தைக் கடவுள் ஆகலின்,

"வேலெடுத்துத்திண் கிரிசிந்த விளையாடும் பிள்ளை''

என அருணகிரியார் போற்றுகின்றார். படிக்காசுப் புலவர் குழந்தைக் கடவுளைப் பின் வருமாறு பாடுகின்றார்:

''சின்னஞ் சிறுபிள்ளை செங்கோட்டுப்
பிள்ளை சிவந்த பிள்ளை
பொன்னன் மணிப்பிள்ளை பூலோக
மெங்கும் புகழும் பிள்ளை
சொன்னெஞ் சுழல்கின்ற சூரனைக்
கொன்ற சொக்கேசர் பிள்ளை
வன்னக் கிளிப்பிள்ளை செந்தில்
குறத்திக்கு மா பிள்ளையே''

வள்ளியம்மை அருள் வடிவமாக இருப்பவள்.

'தெள்ளிய கிள்ளை' என்றும், 'ஞானகுறமாது' என்றும் அருணகிரியார் போற்றுகின்றார். வள்ளன்மையுடையவள் வள்ளிப்பிராட்டியார். வள்ளல் பெருமானின் மனைவியாக அமர்ந்து அருள் மழையைப் பொழிகின்றாள். வள்ளிநாயகியை முருகவேள் வலியச்சென்று ஆட்கொண்டார். கருணைக் கடவுளாகிய முருகப் பெருமான் தம் திருவடிகளை வணங்கும் அடியார்களுக்கு வீடுபேற்றை வழங்குவார்.

கந்தரலங்காரத்தின் இறுதிப் பாடல் பிறவி நோயைப் போக்கி, உடற்சிறையை நீக்கி, வினையாகிய விலங்கை அறுத்து வீடுபேற்றை அருள வல்லதாக அமைந்துள்ளது கண்டு மகிழ்தற்குரியது.

"இடுதலைச் சற்றும் கருதேனைப் போதமிலேனைஅன்பாற்
கெடுதலிலாத்தொண்டரிற்கூட்டியவாகிரவுஞ்சவெற்பை
அடுதலைச்சாதித்த வேலோன் பிறவியறஇச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே."

"திருவகுப்பு" அருணகிரிநாதர் அருளியது.

வேல்வகுப்பு, மயில்வகுப்பு, கொலுவகுப்பு, சிவகிரி வகுப்பு, திருச்செந்தில்வகுப்பு, திருப்பரங்கிரிவகுப்பு முதலிய பிரிவுகளை யுடையது.

"மயிலையும் அவன் திருக்கை
அயிலையும் அவன் கடைக்கண்
இயலையும் நினைந்திருக்க வாருமே"

என்றும்,

"மகபதி தன்பதி பகைகிழி யும்படி யன்றடல்
வாளோங்கிய வேல்வாங்கவே"

என்றும்,

"கோலமுறு செந்தில்நகர்
மேவுகுமரன் கரண
கோகனத மலொடு வணங்கு மயிலே"

"சிவபர கிரியினில் ஒருசிவன் வடிவொடு
திருந்த முருகோன் இருந்த கொலுவே"

என்றும் பாடுகின்றார்.

இக் காலத்திலும் முருகனைப் பாடாத புலவர்கள் இல்லை. முருகா என்றதும் கவி உதிர்கின்றது.

"முருகனின் அருளென்ற முதலான பொருள் கண்டு
உருகினேன் அன்பு முருகா
முத்தமிழ் செப்பிடும் தத்துவச் சக்தியைப்
பருகினேன் வண்ண முருகா

கல்லாத பேதையரும் கற்றவரும் ஒன்ருகி
கைதொழுது பாடும் முருகா
கல்லாக நின்ருலும் கனியாகக் கனிகின்ற
கருணைவடி வானமுருகா''

''முருகனென்ருல் அழகனென்று தமிழ்மொழி கூறும்
அழகன்என் றன் குமரனென்று மனமொழி கூறும்
உயிரினங்கள் ஒன்றையொன்று வாழ்த்திடும் போது
உள்ளிருந்து வாழ்த்துவது உன்னருள் அன்ரே''

''திருப்பரங் குன்றத்தில் நீசிரித்தால் முருகா
திருத்தணி மலைமீது எதிரொலிக்கும்
திருச்செந் தூரிலே வேலாடும்—உன்
திருப்புகழ் பாடியே கடலாடும்''

''குன்றத்தில் ஏறியுனை நெஞ்சத்தில் வைப்பவர்
கோடானு கோடிவாழ்க
வள்ளிமண வாளனை உள்ளத் துணைவனுய்
வைத்தவர் வாழ்கவாழ்க''

''திருத்தணி முருகா தென்னவர் தலைவா
சேவலும் மயிலும் காவலில் பெருமா
தென்பரங் குன்றம் செந்தூர் மன்றம்
தென்தமிழ்ச் சங்கம் திருநாள் எங்கும்''

''சரவணப் பொய்கையில் நீராடி—துணை
தந்தருள் என்றேன் முருகனிடம்
இருகரம் நீட்டி வரம் கேட்டேன்—அந்த
மன்னவன் இன்னருள் மலர்தந்தான்''

''திருச்செந் தூரின் கடலோரத்தில்
செந்தில் நாதன் அரசாங்கம்
தேடித் தேடி வருவோர்க் கெல்லாம்
தினமும் கூடும தெய்வாம்சம்''

''வெற்றிவடி வேலனே சக்திஉமை பாலனே
வீரம் விளைத்த குகனே

உற்றதொரு பகைவெல்ல தோளிலும் நெஞ்சிலும்
ஓங்கிடும் வலிமை யருள்வாய்''

''ஆறுபடை வீடுகொண்ட திருமுருகா
திருமுருகாற்றுப் படைகளிலே வருமுருகா
பாட்டுடைத் தலைவனென்று உன்னைவைத்தேன்—உன்னைப்
பாடித் தொழுவதற்கே என்னைவைத்தேன்.''

கந்தர் அந்தாதியில் மலைமகளின் அருமை மகனே, யான் உனது அடைக்கலம், எமன் வரும்போது என்னைக் காத்தருள்வாயாக என வேண்டுகின்றார். கந்தப்பெருமானே நினது கோழிக்கொடி என்னை ஆட்கொண்டு விட்டது. உன் வேலாயுதம் என் பேராசையை ஒழித்து விட்டது. இனி நான் தேடவேண்டியது ஒன்றுமில்லை. உன்னையறியும் நல்லறிவை எனக்கு அருள்வாயாக என இறைஞ்சுகின்றார்.

குமாரக்கடவுளின் வேலாயுதம் யமதண்டனையை நீக்கிவிடும். எம்பெருமான் தமதுதிருவடித் தாமரையைத் தந்தருள்வார் எனக் கூறுகின்றார்.

''செல்வந் திகழும் மலநெஞ்ச
மேஅவன் தெய்வ மின்னூர்
செல்வந் திகழும் நமதின்மை
தீர்க்கும்வெங் கூற்று வற்குச்
செல்வந் திகழும் திருக்கையில்
வேறினைக் காத்த செல்வி
செல்வந் திகழும் மணவாளன்
நல்கும் திருவடியே.''

**கந்தர் கலிவெண்பா:**

குமரகுருபரர் அருளியது. ஐந்தாண்டுவரை ஊமையாய் இருந்து திருச்செந்தூர் முருகப்பெருமானது திருவருளினாலே கவிபாடும் திறமை பெற்றுக் கந்தர் கலிவெண்பா என்னும் நூலை அருளிச் செய்தார்.

"அன்பர் அகத்தாமரையின்
மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே"

என்றும்,

"ஓங்காரத் துள்ஒளிக்கும் உள்ளொளியாய் ஐந்தொழிற்கும்
நீங்காத பேருருவாய் நின்றோனே"

என்றும்,

"தாரகனும் மாயத் தடங்கிரியும் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே"

என்றும்,

"சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவும்
தெய்வக் களிற்றை மணம் செய்தோனே"

என்றும்,

"தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே"

என்றும் அற்புதமாகப் பாடியுள்ளார். கந்தர் கலிவெண் பாவை அன்புடன் ஓதுகின்றவர்கள் முருகன் திருவருள் பெறுவர்.

"மயிலேறி விளையாடும் அழகோடுவா—கண்
மலராட வடிவேலின் துணையோடுவா
மயிலாடும் சிவஞானப் பழமாகவா—தமிழ்ப்
பணிவோடு உறவாடும் கலையாக வா"

என்று ஓர் அன்பர் அழைக்கின்றார்.

"தெய்வத்தமிழ்த் தெய்வமய்யா
அருள்செய்யும் திருமுருகையா"

எனப் பாடுகின்றார்.

**வேல்விருத்தம்:**

அருணகிரிநாதர் அருளியது. இந்நூலில் வேலின் பெருமையைப் பேசுகின்றார்.

''சிவனறு முகன்முருக னிருதர்கள் குலாந்தகன்
செம்பொற் றிருக்கை வேலே''

''புந்தியி லமர்ந்தவன் கந்தன்முரு கன்குகன்
புங்கவன் செங்கை வேலே''

''கந்தன்முரு கன்குமரன் வண்குறவர் தம்புதல்வி
கணவன்அடல் கொண்ட வேலே''

''தனிநடம் புரிசமர முருகன்அறு முகன்குகன்
சரவணக் குமரன் வேலே''

''கூதாள மலரும் தொடுத்தணியும் மார்பினன்
கோலத் திருக்கை வேலே''

''சமரமயில் வாகனன் அமரர்தொழும் நாயகன்
சண்முகன் தன்கை வேலே''

''முத்துவேல் ரத்னவேல் முருகன்கை வேலாகும்
முத்தமிழில் புகழ்பாடும் முருகன்பேர் அழகாகும்''

என்று ஒரு கவிஞர் பாடுகின்றார்.

முருகன் உறைவிடங்களைக் குறிப்பிடும் போது,

''சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்''

என்று கூறுகிறது சிலப்பதிகாரம்.

மயில்விருத்தம் என்ற நூலில் மயிலின் சிறப்பை ஓதுகின்றார்.

'கல்லார கிரியுருக வருகிரண மரகத
கலாபத்தில் இலகுமயிலே''

''படைநிருதர் கடகமுடை படநடவு பச்சைப்
பசுந்தோகை வாகைமயிலே''

''முருகன்உமை குமரன்அறு முகன்நடவு விகடதட
முரிக்க லாபமயிலே''

''மதுகைட வாரிதிரு மருகன்முரு கன்குமரன்
வரமுதவு வாகைமயிலே''

''வரையசைய உரகபில மசையஎண் டிசையசைய
வையாளி ஏறும் மயிலே.''

*

இந்நூலின் பயனைப் பின்வருமாறு பாடுகின்றார்:

"எந்நாளும் ஒருசுனையில் இந்திரநீ லப்போது
இலங்கிய திருத்தணிகைவாழ்
எம்பிரான் இமையவர்கள் தம்பிரான் ஏறுமொரு
நம்பிரான் ஆனமயிலைப்
பன்னுளும் அடிபரவும் அருணகிரி நாதன்
பகர்ந்தஅதி மதுரசித்ரப்
பாடல்தரும் ஆசறு விருத்தமொரு பத்தும்
படிப்பவர்கள் ஆதிமறைநூல்
மன்னுன் முகம்பெறுவர் அன்னமேறப்பெறுவர்
வாணிதழு வப்பெறுவரால்
மகரா லயம்பெறுவர் உவணம் ஏறப்பெறுவர்
வாரிச மடந்தையுடன்வாழ்
அந்நா யகம்பெறுவர் அயிரா வதம்பெறுவர்
அமுதா சனம்பெறுவர்மேல்
ஆயிரம் பிறைதொழுவர் சீர்பெறுவர் பேர்பெறுவர்
அழியா வரம்பெறுவரே."

திருப்போரூர்ச் சந்நிதி முறை:

இதனை அருளிச் செய்தவர் சிதம்பர சுவாமிகள். முருகப்பெருமான் அருணகிரிநாதரிடம் குருவடிவாக வந்து அருளுரை பகர்ந்த உண்மையைத் தமது நூலில் குறிப்பிடுகின்றார்:

"சும்மா இருவென நீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலமென்று அன்றுரைத்த—எம்மான்
அருணகிரி நாதன் அநுபவம்நா யேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு."

நோயற்ற வாழ்வு வேண்டுமெனக் கேட்கின்றார்:

"நோயுற் றடராமல் நொந்துமனம் வாடாமல்
பாயில் கிடவாமல் பாவியேன்—காயத்தை
ஓர்நொடிக்குள் நீக்கியெனை ஒண்போரூர் ஐயாநின்
சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து."

இறைவனைப் பின்வருமாறு வாழ்த்துகின்றார்:

"ஆறு முகம்வாழி ஆறிரண்டு தோள்வாழி
தேறுபதம் வாழிஇரு தேவிமார்—வீறுபுடை
வாழிவேல் வாழி மயில்வாழி போரூரர்
வாழிசகம் வாழி மகிழ்ந்து."

**கந்தர் சட்டி கவசம்:**

தேவராய அடிகள் இயற்றியது

"வரவர வேலா யுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக"

என அழைக்கின்றார்.

"வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க"

என வாழ்த்துகின்றார்.

"குருபரன் பழநிக் குன்றினி லிருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி"

எனப் போற்றுகின்றார்.

"சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்"

எனப் பாடி முடிக்கின்றார். இதனை ஓதுவோர்க்கு வினை விலகும். நாள்தோறும் தவறாது ஓதியதால் பலர் நோய்கள் நீங்கி நல மடைந்துள்ளனர்.

**பிள்ளைத் தமிழ்:**

திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் மார்க்க சகாய தேவர் அருளியது. குழந்தைகளிடம் கொஞ்சுவதுபோல இனிய தமிழில் பாடி இன்பமளிப்பது. குழந்தையின் பருவங்களைச் சிறப்பித்துக் கூறுவது.

''முதிராமணி வாயால்ஒரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாஒரு முத்தந்தனை யருளே''

என வேண்டுகின்றார்.

''முருகா வருக சதுர்வேத முதல்வா வருக வினை தீர்க்கும்
முனைவா வருக மலர்ஆறு முகவா வருக திருமாலின்
மருகா வருக மயிலேறும் மன்னா வருக அடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா மணியே வருக வருகவே''

எனவும்,

''அண்ணல் வருக உலகமுழு தாண்டாய் வருக கதிதரும்எம்
ஐயா வருக ஆறுமுக அப்பா வருக விளங்குகதிர்
வண்ணா வருக மயிலேறும் மன்னா வருக அடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா மணியே வருக வருகவே''

எனக் குழந்தைக் கடவுளை அழைக்கின்றார்.

**முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் :**

இறைவனைக் குழந்தையாக வைத்துப் பாடியது. இதனை இயற்றியவர் குமர குருபர சுவாமிகள். குமரக் கடவுள் அவர் கனவில் தோன்றி 'பிள்ளைத் தமிழ் பாடுக' எனக் கட்டளை யிட்டனர். வைத்தீசுரன்கோயில் என வழங்கும் புள்ளிருக்கு வேளூரில் முருகப் பெருமான் திரு முன் இந்நூல் அரங்கேற்றப்பட்டது.

வருகைப் பருவத்தில்,

''சிறு குறும்பு செய்தவன் வருகவே''

எனப் பாடுகின்றார். குழந்தை முருகன் குறும்பு செய்கின்றான். தவழ்ந்தும் தளர்நடையிட்டும் தாயின் மடியில் ஏறுகின்றான். தந்தையாரிடம் சென்று அவர் கையிலிருக்கும் உடுக்கையைத் தட்டி ஒலி எழுப்புகின்றான். மற்றொரு கையிலுள்ள தீயினைக் கங்கை நீர்விட்டு அணைக்கின்றான். பிறைச் சந்திரனை அவர் அணிந்துள்ள பாம்பின் வாயில்

திணிக்கின்ருன். திருமுடியிலுள்ள அறுகம்புல்லைப் பறித்து அவர் கையிலுள்ள மானுக்கு உணவாகக் கொடுக்கின்ருன். அவர் மார்பின்மேல் நின்று குதித்து விளையாடுகின்ருன். திருமுடியில் ஏறி அங்குள்ள கங்கையாற்றில் நீந்துகின்ருன். இளமைப் பருவத்திற்கு ஏற்பக் குறும்புகள் பல செய்து விளையாடியவனே எனப் பாடி மகிழ்கின்ருர்.

அம்புலிப் பருவத்தில்,

''அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே''

என அழைக்கின்ருர்.

திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ் :

பகழிக்கூத்தர் அருளிச் செய்தது. முருகப் பெருமானைக் குழந்தையாக வைத்துத் தாலாட்டுகின்ருர் :

''தீம்பால் பருகும் திருச்செந்தூர்ச்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம் புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ''

''சங்கு வலம்புரிசூழ் செந்தில் வளம்பதியாய்
தாலோ தாலேலோ

''சங்கரி தன்குமரா மங்கையர் தங்கணவா
தாலோ தாலேலோ''

என இறைவனைச் சீராட்டிப் பாராட்டுகின்ருர்.

குமரேச சதகம் :

குருபாததாசர் இயற்றியது. இந் நூலில் குமரேசர் பெருமை, ஊழின் வலிமை முதலியவற்றைப் பாடியுள்ளார். ஒவ்வொரு பாடலின் முடிவிலும்,

''மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே''

என வருகின்றது.

''உலகிலுனை நிகரான தெய்வமுண்டோ''

எனப் பாடுகின்றார்.

**சண்முக கவசம் :**

குமர குருதாச சுவாமிகள் அருளியது. பகை கடிதல் என்றும் சண்முக கவசம் என்றும் இரு பகுதிகளாகப் பாடியுள்ளார்.

''மருமலர் அணிபலவே மருவிடும் களமயிலே
குருபல அவிர்மயிலே கொணர்தியுன் இறைவனையே''

என மயிலை அழைக்கின்றார்.

''எண்திசை போற்றநின்ற என்அருள் ஈசனான
திண்திறல் சரவணத்தான் தினமும்என் சிரசைக் காக்க''

''தனிமையில் கூட்டம் தன்னில்
சரவண பவனார் காக்க''

எனப் பாடுகின்றார்.

**திருத்தணிகைப் புராணம் :**

கச்சியப்பர் அருளியது. சைவ சமய நுண்பொருள் விளக்கங்களைக் கூறுவது. தணிகையில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமான் சிறப்புக்களை எடுத்து ஓதுகின்றது.

திருத்தணிகைக்குப் பல பெயர்கள் வழங்குகின்றன. அடியார்களுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதால் தணிகாசலம் என்று பெயர் பெற்றது. நீலோற்பலகிரி, காவிமலை, நீலகிரி என்ற பெயர்களும் வழங்குகின்றன.

போரினால் உண்டாகிய சினம் தணியப் பெற்ற இடமாதலால் செருத்தணி எனவும் கூறப்படும்.

முருகக் கடவுள் அருட் சக்தியாகிய வேலைப் பெறுவதற்குச் சிவலிங்கத்தை வைத்து வழிபட்டார். சிவபெருமான் தோன்றி முருகனிடம் சக்தி வேலைக் கொடுத்து அங்குள்ள சிவலிங்கத்தில் மறைந்தருளினர். இதனைக் குமரலிங்கம் எனக் கூறுகின்றனர். குமார தீர்த்தம் நோய்களைப் போக்குகின்றது.

அகத்தியர் திருத்தணிக்கு வந்து அருந்தவம் புரிந்தார். முருகன் அகத்தியருக்குக் காட்சி கொடுத்துத் தமிழ் இலக்கணங்களை உரைத்தருளினர். அகத்தியர் தணிகைமலையில் நெடுநாள் இருந்து பிறகு பொதிய மலையை அடைந்தார்.

திருத்தணியில் நாரதர் வழிபாடுகள் செய்த சிவலிங்கத்திற்கு நாரதலிங்கம் என்ற பெயர் வழங்குகின்றது. நாரதருக்கு முருகப் பெருமான் அருளுரை வழங்கியதாகப் புராணம் கூறுகின்றது. நாரதர் ஆறுமுகப் பெருமானை வணங்கி மனம் தெளிவடைந்தார்.

'பெருமை நிதியே மால்விடைகொள் பெம்மான்
வருந்திப் பெறும்பேறே
அருமை மணியே தணிகைமலை அமுதே
உன்றன் ஆறெழுத்தை
ஒருமை மனத்தின் உச்சரித்துஇங்கு உயர்ந்த
திருவெண் ணீறிட்டால்
இருமை வளனும் எய்துமிட ரென்ப
தொன்றும் எய்தாதே''

''எய்தற் கரிய அருட்சுடரே எல்லாம்
வல்ல இறையோனே
செய்தற் கரிய வளத்தணிகைத் தேவே
உன்றன் ஆறெழுத்தை

உய்தற் பொருட்டுஇங்கு உச்சரித்தே உயர்ந்த
திருவெண் ணீறிட்டால்
வைதற் கில்லாப் புகழ்ச்சிவரும் வன்கண்
ஒன்றும் வாராதே.''

திருத்தணியில் விழாக்கள் மிகவும் சிறப்பாக நடைபெறுகின்றன. ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் ஆயிரக்கணக்காகக் காவடி எடுப்பார்கள். இன்னிசையுடன் திருப்புகழ் பாடுவார்கள். கிருத்திகை விழாவில் பல வகையான காவடிகளின் அழகைக் காணலாம். ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் 31 ஆம் நாள், சனவரி முதல்நாள் இரண்டு நாட்களிலும் படிவிழா நடக்கின்றது. ஒவ்வொரு படியிலும் நின்று பாடிச் சூடம் ஏற்றுவார்கள். செவிக்கினிய முருகன் பாடல்களை அப்பொழுது கேட்கலாம்.

இராமலிங்க அடிகள் மனமுருகிப் பாடியபோது திருத்தணி முருகன் நேரில்வந்து காட்சியளித்தார்.

''அண்ணுவோ என்னருமை ஐயாவோ பன்னிரண்டு
கண்ணுவோ வேல்பிடித்த கையாவோ செம்பவள
வண்ணுவோ நற்றணிகை மன்னுவோ என்றென்றே
எண்ணுவோ துன்பத் திருங்கடற்குள் மன்னினனே''

எனப் பாடுகின்றார்.

''முடியா முதலே சரணம் சரணம்
முருகா குமரா சரணம் சரணம்
வடிவேல் அரசே சரணம் சரணம்
மயிலூர் மணியே சரணம் சரணம்''

என்று முருகனிடம் சரணடைகின்றார்.

முருகப் பெருமான் அவரை ஆட்கொண்ட திறத்தினை,

''சென்னியில்நின் அடிமலர் வைத்தென்னை முன்னே
சிறுகாலை ஆட்கொண்ட தேவதேவே''

எனப் பாடுகின்றார்.

இறைவனை யடைய இனிய பாடல்களை உள்ள முருகிப் பாடவேண்டும். நெஞ்சமாகிய கல் நெகிழ்ந்து உருகும் வண்ணம் முருகனைப் பாடி வாழ்த்த வேண்டும். மெய்யன்போடு வேண்டினால் முருகன் வந்து நமது கவலையை மாற்றி அருள் புரிவான் முருகன் திருவருளினால் இளமையும், அழகும், இன்பமும் பெறலாம்.

ஆனந்தத் தேனிருக்கும் ஆறுமுகக் கற்பகமே
ஈனந்தீர் போத இரவியே—தேனுந்து
நீபத் துடையாய் நிகழ்போரூர் ஐயாயென்
தாபத் திரயந் தவிர்.

—சிதம்பர சுவாமிகள்

பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பாய்
நாடாத உள்ளமும் நான்படைத் தால்நர கேமுஞ்சென்று
கூடா துயர்கதி கூடுவ னேகுன் றெறிந்தவைவேல்
சேடார் மதிற்செந்தி லாய்என்கொ லோநின் திருவருளே.

— திருச்செந்திற் கலம்பகம்

''ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ ரடியா ரெல்லாம்.''



———

கழக வெளியீடுகள்

## முருகன் புகழ் நூல்கள்

முருகன் புகழ்நூற்கோவை —
திருமுருகாற்றுப்படை
உரைநடையும் குறிப்பும் —
ஆறுபடை வீடுகள் கந்தர் சட்டி கவசம்
கந்தர் கலிவெண்பா
உரைநடையும் குறிப்பும் —
திருப்புகழ் குறிப்புரையுடன் —
முருகப் பெருமான் மலர் வழிபாடு —
தமிழ்க் கடவுள் முருகவேள் —
திருத்தணிகை பதிற்றுப் பத்தந்தாதி உரை
சென்னைக் கந்தகோட்டப் புகழ்மாலை
திருத்தணிகை முருகன் புகழ்மாலை
திருத்தணிகைத் திருப்புகழ்
திருப்புகழ்த் திரட்டு —
கந்தர் சட்டி கவசம் குறிப்புரை —

---

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்.,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.